

# அம்ருதா
AMRUDHA

வேள்வி 14 கலசம் 162
Volume 14 Issue 162

ஜனவரி 2020 ரூ. 25
January 2020 Rs.25

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism



**வினோபாவேயின் மகத்தான சாதனை**
பாவண்ணன்



**இலக்கியமும் இலக்கியவாதிகளும்**
வண்ணநிலவன்

நூற்றாண்டு நினைவு

## தன்னை அறிதலின் கலைஞன்

பெடெரிக்கோ ஃபெலினி

கேள்வி 14 கலசம் 162



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஜனவரி-2020 விலை ரூ. 25





**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


## இந்த இதழில்

# அறிவியலும் கண்டுபிடிப்பும் நம்மை வழிநடத்தட்டும்!

பிரபு திலக்

இந்தியா ஒரு அசாதாரண நிலையை மீண்டும் சந்தித்துள்ளது. நாடு முழுவதும் போராட்டங்கள் நடக்கின்றன. மாணவர்கள் குடியுரிமை திருத்த சட்டத்துக்கும், தேசிய குடிமக்கள் பதிவேட்டுக்கும் எதிராக தன்னெழுச்சியாக போராடி வருகிறார்கள். பல நகரங்களில் 144 தடை உத்தரவு, இணைய சேவை துண்டிப்பு, வன்முறை, உயிர்ப்பலி என பதட்டமான சூழல் நிலவுகிறது. வரலாற்றாசிரியர் ராமச்சந்திர குஹா, சமூகச் செயற்பாட்டாளர் ஹர்ஷ்மந்தர், வழக்கறிஞர் பிரசாந்த் பூஷன், இந்திய பொதுவுடைமைக் கட்சியின் தலைவர்கள் என பலர் கைது செய்யப்பட்டார்கள்.

இந்த குடியுரிமைத் திருத்தச் சட்டம் 2016ஆம் ஆண்டிலேயே கொண்டு வரப்பட்ட ஒன்றாகும். 2016ஆம் ஆண்டு மக்களவையில் அறிமுகம் செய்யப்பட்டது. அறிமுக நிலையிலேயே எதிர்ப்பு எழுந்ததால் அது பாராளுமன்ற கூட்டுக் குழுவிற்கு அனுப்பப்பட்டது. ஆனால், அதற்கு முன்பாகவே இந்த சட்டத்தில் உள்ள அம்சங்கள் உள்துறை அமைச்சகத்தின் குறிப்பாணைகள் மூலமாக நடைமுறைக்கு வரத் தொடங்கியிருந்தன.

2015ஆம் ஆண்டில் அயல்நாட்டவர் சட்டத்தில் முதலில் திருத்தம் கொண்டுவரப்பட்டது. அதில் பாகிஸ்தான், பங்களாதேஷ் ஆகிய இரண்டு நாடுகளைச் சேர்ந்த இந்துக்கள், சீக்கியர்கள் சமணர்கள், பௌத்தர்கள், பார்சிக்கள், கிறித்தவர்கள் ஆகியோர் சட்ட விரோதமாக இங்குவந்து குடியேறி இருந்தால் அவர்களுக்கு விலக்கு அளிக்கப்பட்டது. அடுத்து, 2016ஆம் ஆண்டில் பாஸ்போர்ட் சட்டத்தில் திருத்தம் கொண்டுவரப்பட்டது. இதில் முந்தைய திருத்தத்தில் இடம்பெற்றிருந்த பாகிஸ்தான், பங்களாதேஷ் ஆகிய நாடுகளோடு ஆப்கானிஸ்தானும் சேர்க்கப்பட்டது.

இந்நிலையில்தான், இந்த முன்வரைவு 2016ஆம் ஆண்டு பாராளுமன்ற கூட்டுக் குழுவுக்கு அனுப்பப்பட்டு, கூட்டுக்குழு தன்னுடைய அறிக்கையை 2019 ஜனவரி மாதத்தில் அரசிடம் அளித்தது. இதனையடுத்து, ஆட்சிக்காலம் முடிவதற்கு முன்பாக இந்த முன்வரைவை சட்டமாக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஆனால், அப்போது மாநிலங்களவையில் பாஜக கூட்டணிக்கு போதுமான பலம் இல்லாத காரணத்தால் நிறைவேறாமல் ஆட்சிக்காலம் முடிவுக்கு வந்தது. தற்போது இரண்டு அவைகளிலும் நிறைவேற்றப்பட்டு, குடியரசு தலைவர் ஒப்புதல் பெற்று, சட்டமாக அமல்படுத்தப்பட்டுள்ளது.

பாகிஸ்தான், வங்கதேசம், ஆப்கானிஸ்தான் ஆகிய மூன்று நாடுகளில் இருந்து வந்த இந்துக்கள், சீக்கியர்கள், பார்சிக்கள், கிறித்தவர்கள், சமணர்கள், பௌத்தர்களுக்கு மட்டும் குடியுரிமை வழங்கப்படும் என இந்த சட்டம் சொல்கிறது. இஸ்லாமியர்கள் குடியுரிமைப் பெறுவ திலிருந்து விலக்கி வைக்கப்பட்டுள்ளார்கள். அதுபோல் அஸ்ஸாமில் சில பகுதிகள், மேகாலயா, மிஸோராம், திரிபுராவின் சில பகுதிகள், அருணாச்சல பிரதேசம், நாகலாந்து மாநிலங்களுக்கும் இது பொருந்தாது.

இதன்மூலம், இந்த சட்டம் ஒடுக்குமுறைக்கு உள்ளாகுபவர்களுக்கு மத அடிப்படையில் பாரபட்சம் காட்டுவதுடன், இஸ்லாமிய நாட்டு ஒடுக்குமுறைகளை மட்டுமே பேசுகிறது; இதர நாட்டு ஒடுக்குமுறைகள் பற்றி கவலை கொள்வதில்லை என்பது தெளிவாகிறது. அரசே மத அடிப்படையில் பாரபட்சம் காட்டுவது நம்முடைய அரசியலமைப்புச் சட்டத்துக்கு எதிரானது. ஒருவர் இந்தியராக இருந்தாலும் சரி, அயல்நாட்டவராக இருந்தாலும் சரி அவர்களை சமமாக நடத்த வேண்டும் என்றுதான் நமது அரசியலமைப்பு சட்டம் கூறுகிறது.

இஸ்லாமியர்கள் போலவே ஈழத் தமிழ் அகதிகளுக்கும் இந்த சட்டத் திருத்தத்தில் பாரபட்சம் காட்டப்பட்டுள்ளது. தமிழ்நாட்டில் கிட்டத்தட்ட ஒன்றரை லட்சம் இலங்கைத் தமிழர்கள் 30 ஆண்டுகளுக்கும் மேலாக அகதிகளாக வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள். அவர்களுக்குக் குடியுரிமை வழங்கவேண்டும் என்ற கோரிக்கைகள் பலமுறை முன்வைக்கப்பட்டுள்ளது. ஆனால், அப்போதெல்லாம் எந்த நடவடிக்கையையும் மத்திய அரசு எடுக்கவில்லை. இப்போதும் இலங்கைத் தமிழ் அகதிகள் விடுபட்டுள்ளார்கள்.

இது தொடர்பாக எழுத்தாளரும் மக்களவை

உறுப்பினருமான ரவிக்குமார் எழுப்பிய கேள்விக்கு, "இந்திய குடியுரிமை என்பது இந்தியக் குடியுரிமைச் சட்டம் 1955 மற்றும் குடியுரிமை விதிகள் 2009இன் அடிப்படையில் வழங்கப்படுகின்றது. அந்த சட்டத்தின் பிரிவு 5இன் படி பதிவுசெய்துகொண்ட அயல்நாட்டவர் எவரும் இந்திய குடியுரிமையைப் பெற முடியும். அந்த சட்டத்தின் பிரிவு 6இன் படி இயல்புரிமை அடிப்படையில் குடியுரிமை பெற முடியும். ஆனால், சட்டவிரோதமான குடியேறிகள் இந்த இரண்டு விதங்களிலும் குடியுரிமையைப் பெற முடியாது" என உள்துறை இணை அமைச்சர் எழுத்துபூர்வமாக பதிலளித்தது குறிப்பிடத்தக்கது.

பாகிஸ்தான், வங்கதேசம், ஆப்கானிஸ்தான் உட்பட பல்வேறு நாடுகளில் இருந்து இந்தியாவுக்குள் வந்துள்ள அகதிகள் எல்லோருமே நம் நாட்டு சட்டத்தின்படி 'சட்டவிரோதக் குடியேறிகள்'தான் என்பது குறிப்பிடத்தக்கது.

குடியுரிமைத் திருத்தச் சட்டத்தோடு இது முடிந்துவிடப் போவதில்லை என்பதுதான் இந்தியா முழுவதும் மனசாட்சி உள்ளவர்களிடையே அச்சத்தை அதிகப்படுத்தி இருக்கிறது. அதாவது, அடுத்ததாக 'தேசிய குடிமக்கள் பதிவேடு' முறையை இந்தியா முழுவதும் கொண்டு வரப்போகிறோம்' என்று உள்துறை அமைச்சர் அமித் ஷா கூறியிருக்கிறார். இதன்படி ஒவ்வொருவரும் தங்கள் குடியுரிமையை நிரூபிக்க படாதபாடு படவேண்டியிருக்கும் என்பது ஒருபக்கம் இருக்க, ஒருவேளை அப்படி நிரூபிக்க முடியாமல் போனால், அதிலும் இஸ்லாமியர்கள் தவிர மற்றவர்கள் குடியுரிமை திருத்த சட்டம்படி மீண்டும் குடியுரிமை பெற்றுவிடுவார்கள் என்பதும்; இங்கேயும் மீண்டும் இஸ்லாமியர்களே பாதிக்கப்படும் சூழலே உருவாகும் என்பதும் குறிப்பிடத்தக்கது.

ஆம், குடியுரிமை சட்ட திருத்தமும் தேசிய குடிமக்கள் பதிவேடும் வேறு வேறல்ல. இரண்டும் இணைந்தால் என்ன நடக்கும் என்பதை உணர்வதாலேயே மாணவர்களுடன் ராமச்சந்திர குஹா போன்ற அறிவுஜீவிகளும் போராட்டத்தில் ஈடுபட்டார்கள்.

இந்தியாவில் இன்று நடப்பதெல்லாம், ஜெர்மனியில் ஏற்கெனவே நடந்தவற்றின் மறுபதிப்பாகவே இருப்பதும் குறிப்பிடத்தக்கது. ஜெர்மனியில் ஹிட்லர் தலைமையிலான நாசி கட்சி, தீவிர தேசியவாதத்தை கொள்கையாக அறிவித்தது. தனது அனைத்து கொள்கை அறிக்கையிலும் யூதர்களுக்கு எதிரான நிலைப்பாட்டை மீண்டும் மீண்டும் கொண்டு வந்து உறுதியுடன் நின்றது. யூதர்களின் மத சடங்கு அடிப்படையிலான விலங்குகளை பலியிடும் சடங்குக்கு பல மாநிலங்களில் தடைவிதிக்கப்பட்டது. ஜெர்மானியர் தூய ரத்தத்தை காக்க, யூதர்களுக்கும் ஜெர்மானியர்களுக்கு திருமணம் செய்துகொள்வது தடை செய்யப்பட்டது. மருத்துவர், ஆசிரியர், வழக்கறிஞர் உள்ளிட்ட பணிகளுக்கு யூதர்கள் வருவது தடை செய்யப்பட்டது. பள்ளிகளில் அனைவரும் படிக்கக்கூடாது என்பதற்காக சட்டங்கள் கொண்டுவரப்பட்டன. பள்ளிகளில் தூய இனவாதத்தை போதிக்கும் பாடங்கள் கொண்டுவரப்பட்டன.

உச்சமாக 1933ஆம் ஆண்டு குடியுரிமை மற்றும் இயற்கைமயமாக்கல் சட்டம் என்ற பெயரில் யூதர்களை ஜெர்மன் சமூகத்திலிருந்து நீக்கும் சட்டம் கொண்டுவரப்பட்டது. எடுத்த எடுப்பிலேயே ஒன்றரை லட்சம் யூதர்களுக்கு குடியுரிமை ரத்து செய்யப்பட்டது. விவசாயம் செய்வது, நடிப்பது, கலாச்சாரம் தொடர்பான செயல்பாடுகளில் ஈடுபடுவது போன்றவை யூதர்களுக்கு தடை விதிக்கப்பட்டது. ஜெர்மன் ரத்த முறையினர் மட்டுமே குடியுரிமை உள்ளவர்கள் எனக்கூறி யூதர்களுக்கு முற்றிலுமாக குடியுரிமை மறுக்கப்பட்டது. அவர்கள் சொந்த நாட்டிலேயே 'வெளிநாட்டினர்' என அழைக்கப்பட்டனர். அதுபோல் இப்போது இங்கே இஸ்லாமியர்கள் குறிவைக்கப்படுகிறார்கள்.

வேலையில்லாத்திண்டாட்டம், விலைவாசி உயர்வு, பொருளாதார சரிவு போன்ற பல விசயங்களால் நாடு நெருக்கடியில் இருக்கும்போது குடியுரிமை சட்ட திருத்தம், தேசிய குடிமக்கள் பதிவேடு போன்றவற்றில் ஏன் இவ்வளவு அவசரம்?

'The Great Dictator' படத்தின் இறுதிக் காட்சியில் சாப்ளின் பேசும் வசனங்கள் நினைவுக்கு வருகின்றன.

நாம் ஒருவருக்கொருவர் உதவவே விரும்புகிறோம், நம் மனிதர்களாக இருப்பதால். மற்றவர்களுடன் மகிழ்ச்சியுடன்தான் வாழ விரும்புகிறோம், துன்பங்களோடு அல்ல.

இந்த உலகம் வளமை மிகுந்தது; செல்வங்களை அள்ளித் தருவது. நமது வாழ்வு சுதந்திரமானது. ஆனால், நாம்தான் அதனை மெல்ல மெல்ல இழந்து வருகிறோம். பேராசை மனிதனின் ஆன்மாவுக்குள் நஞ்சாய்ப் புகுந்துவிட்டது. வெறுப்பை வளர வைத்து ரத்தச் சகதியில் தள்ளிவிட்டது. வேகமாய் வளர்ந்திருக்கிறோம். மனக் கதவுகளையோ மூடிக் கொண்டிருக்கிறோம். அதிகமாக சிந்திக்கிறோம்; குறைவாகப் பரிவு காட்டுகிறோம்.

எந்திரங்களைவிட மனிதாபிமானமே இன்றைய தேவை. புத்திசாலித்தனத்தைவிட அன்பும் கருணையும் உடனடியாகத் தேவை. இவை இல்லாமற் போனால் வாழ்வு வன்முறை மயமாகிவிடும்.

ஆகாய விமானங்கள் நம் உறவை நெருங்கச் செய்திருக்கின்றன. ஆனால், மனித குல உயர்வை விரும்பாத சிலரின் பேராசை நம்மை ஆட்டிப் படைக்கிறது.

வெறுப்பை உதறுங்கள். அன்பிலா இதயம்தான் வெறுப்பைச் சுதந்திருக்கும். நீங்கள் கருவிகளையும் மகிழ்ச்சியையும் கண்டுபிடிக்கும் ஆற்றல் உடையவர்கள். இந்த உலகம் உழைப்பை மதிக்கட்டும். இளைய தலைமுறைக்கு நம்பிக்கையையும் மூத்தோருக்கு பாதுகாப்பையும் வழங்கட்டும்.

நம்மை பிரித்திருக்கும் நாடு, பேராசை, வெறுப்பு, சகியாத் தன்மை என்ற தடைகள் அனைத்தையும் துறந்து பொருள் பொதிந்த உலகை உருவாக்குவோம். அறிவியலும் முன்னேற்றமும் நம்மை வழிநடத்தட்டும்."

ஆட்சியாளர்கள் இதனை உணர்ந்து, மக்கள் குரலுக்கு செவிசாய்க்க வேண்டும். ●

# முதல் இந்தியப் பயணம்!

## நடேசன்

இலங்கை

“எடேய், இதெல்லாம் சினிமா நடிகைகள்; சரஸ்வதி சபதத்தில் நடித்தவர்கள். இவர்களைக் கும்பிட்டால் எப்படி படிப்பு வரும்?”

என் நண்பன் தூசண வார்த்தைகளைப் பேசி அடிக்க வந்தான். நான் சிரித்தபடி மேல்மாடி விடுதியில் இருந்து கீழே ஓடி ஒளிந்தேன். கிட்டத்தட்ட ஒரு கிழமை என்னுடன் அவன் முகம் கொடுத்துப் பேசவில்லை.

யாழ்ப்பாணம் இந்து கல்லூரியின் விடுதியில் வசிக்கும் மாணவர்களுக்கு கட்டிலும், கபேட் எனப்படும் சிறிய அலுமாரியும் தருவார்கள். அந்த அலுமாரி, புத்தகங்கள் வைத்து எடுப்பதற்கானது. இவையே எமது சொத்துகள்.

அது விஜயதசமி வரும் ஒக்டோபர் மாசம். எனது பக்கத்துக் கட்டிலின் மாணவன் என்னைப்போல் தீவுப் பகுதியான புளியங்கூடலைச் சேர்ந்தவன். பக்கத்து கட்டிலான படியால் அவன் நட்பு அவசியம். பக்திப் பரவசமான சைவப்பழம். ஒவ்வொரு நாளும் ஒழுங்காக அவன் நெத்தியில் வீபூதி இருக்கும்.



ஒரு நாள் காலையில் கபேட்டைப் திறந்து வைத்து அதன் எதிரே பார்த்து கிட்டத்தட்ட அரை மணிநேரமாக பக்திப்பழமாக வணங்கிபடியிருந்தான். அது சரஸ்வதி பூசைக்காலம். பாடசாலைப் பரிட்சைகள் வருகிறது என்பதால் அவனது பக்தி கூடியுள்ளது என நினைத்தேன். நின்றபடி வணங்கும் அவனது பின்பகுதி மட்டும் எனக்குத் தெரிந்ததால் தோளில் திருநீறு பூசப்பட்டிருந்தது பார்க்க முடிந்தது.

இவ்வளவு பக்தி அதிகம்! அதுவும் எட்டாம் தரத்தில் படிக்கும்போதே இவன் வளர்ந்து சாமியாராகி விடுவானோ?

இருவரும் கீழே காலையாகாரத்துக்கு ஒன்றாக செல்வோம் எனக் காத்திருந்தேன். அதிக நேரமானதால் மெதுவாக எழுந்து அவனுக்கு பின்னால் சென்று அவனது அலுமாரியுள் பார்த்தேன். கண்ணாடியில் பிரேம் பண்ணிய மூன்று அழகிய பெண்களது படங்கள் இருந்தது. அதன் முன்பு வீபூதி, குங்குமம், சந்தனம் மூன்று சிறிய தட்டுகளில் குவிக்கப்பட்டிருந்தது. அந்தப் படங்களில் முறையே சாவித்திரி, தேவிகா, பத்மினி என்ற ஏ.பி. நாகராஜனின் சரஸ்வதி சபதத்தில் நடித்த நடிகைகள் இருந்தார்கள்.

“என்னடா இவ்வளவு நேரமாக கும்பிடுகிறாய்?” என்றேன்.

என்னை எதிபார்க்காததால் திடுக்கிட்டு திரும்பியவன், நெற்றி கழுத்தில் திருநீறு சந்தனம் வைத்து, சைவப் பழமாக இருந்தான்.

“நீ படிக்கிற பிள்ளை. சரஸ்வதி பூஜை என்பதால் அம்மா இந்த படத்தைத் தந்து பத்து நாளும் கும்பிடச் சொன்னார்” என்றான் அப்பாவியாக.

சினிமா அறியாமை எல்லாம் கலந்து எம்மை ஆக்கிரமித்திருந்த காலமது. இந்துக் கல்லூரியில் படித்த காலத்தில் என்னையறியாமல் என்னுடன் திராவிட கொள்கைகள் கலந்தது. அக்காலத்தில் அண்ணாத்துரையின் ‘கம்பரசம்’ எனது வேதமாக, நாத்தீகத்தை வலுப்படுத்தும் ஆயுதமாக இருந்தது. யாழ்ப்பாணத்தில் ஒலிபெருக்கிகளின் மூலம் அண்ணாத்துரையின் பேச்சுக்கள், அடுக்கு மொழிகள் எம்மைத் தேடி வந்தன. அதேபோல் தமிழ் சினிமா எமது மாணவ வாழ்க்கையில் முக்கிய இடத்தைப் பிடித்தது. எம்ஜியார் அணி, சிவாஜி அணி என பிரிந்து அவர்களது நடையுடைகளை பின்பற்றினோம். படங்களை அலசி ஆராய்ந்து மணிக்கணக்கில் விரயமாக்கினோம். முதல் நாள் படம் பார்ப்பது முக்கிய இலட்சியமாக இருந்தது.

எமது விடுதியில் 20 மணவர்கள் ஒரே இடத்தில் ஐந்து நிமிடம் தண்ணியில் குளிப்பார்கள்; அவர்கள் சவரக்காரம்போட அதன்பின் மற்ற 20 பேர் குளிப்பதற்கு மாறுவார்கள். இப்படியான ஒரு நேரத்தில் எம்ஜியாரா, சிவாஜியா சண்டை வந்து நிலத்தில் கட்டி பிடித்து புரண்டு குளிக்கச் சென்றவர்கள் சேறாகியதைப் பார்த்தேன்.

அக்காலத்தில் படப்பெட்டிகள் நல்லூர் கோவிலுக்கு எடுத்துச் சென்று பின், ஊர்வலமாக தியேட்டருக்கு கொண்டு வருவார்கள். பெரிய கட்அவுட்டுகள், பானர்கள் வைப்பார்கள். நகரெங்கும் திரைப்பட சுவரொட்டிகள் ஒட்டப்படும். வரிசையில் நின்று நசுங்கி இடிபட்டு, படம் பார்த்து முடிந்த பின்பு, எதிர்கடைகளில் விற்கப்படும் அந்தப் படத்தின் பாடல்கள் கொண்ட புத்தகம் வாங்குவோம். அவற்றோடு சேர்ந்து சரோஜாதேவி எழுதிய ஆபாச எழுத்துகள் கொண்ட புத்கங்கள் வாங்குவோம்.



ஒன்றை சட்டையின் உள்ளேயும் மற்றதை வெளியிலும் வைத்துக்கொள்வோம்

தமிழகத்தில் இருந்து வந்த சினிமா, அரசியல் சிறுவர்களாகிய எங்களை மட்டுமல்ல, பெரியவர்கள் மூளைகளையும் கறையானாக அரித்தது. தமிழகத்தில் எழுந்த இந்தி எதிர்ப்பின் நிழலாக இங்கு சிங்கள எதிர்ப்பு நிஜமாகியது. அரசியல்வாதிகளில் தமிழ் நாட்டைப்போல் அடுக்கு வசனத்தில் பேசும் இராஜதுரை போன்றவர்கள் புகழ்பெற்றார்கள். அந்தனிசில், காசியானந்தன் போன்றவர்கள் ஆதர்ச எழுத்தாளராகினார்கள். யானைகள் விழுங்கி வெளிவந்த விளாங்கனிகளை பூசைக்குரிய பழமாகப் பார்த்தோம்.

தமிழ்நாடு போன்ற தொன்மையான பிரதேசம் எமக்குப் பக்கத்தில் இருந்தது. அதனது ஆதிக்கத்தில் இருந்த தப்ப முடியாது என்பதும் உண்மை. ஆனால், நாங்கள் தமிழ்நாட்டில் இருந்து நடனம், சிற்பம், சித்திரம், கிராமியக் கலைகளை பெற்றுக்கொள்ளவில்லை. மாளிகை வீட்டின் அருகாமையில் இருந்து அதன் அசுத்தங்களை நுகரும் ஒரு வாழ்க்கையை நாங்கள் வாழ்ந்ததை பிற்காலத்தில் தென்னிலங்கை போனபோதே உணர்ந்தேன். சிங்கள மக்கள் தங்களுக்கு தேவையான தொன்மமான திராவிடக் கலாச்சாரத்தை மட்டும் எடுத்துக்கொண்டு தனியான வழியில் சென்றுவிட்டார்கள் என்பதை பேராதனையில் சிங்கள நாடகங்கள், சினிமாக்களைப் பார்த்தபோது என்னால் புரிந்துகொள்ள முடிந்தது.

## இந்தியா

இராமேஸ்வரத்தில் தொடங்கிய எனது இரயில் வண்டிப் பயணம் எக்மோர் இரயில் நிலையத்தில் முடிந்தது. எனக்குத் தெரிந்த கொழும்பு கோட்டை இரயில் நிலையத்தை ஒப்பிட்டுப் பார்த்தால் பத்து மடங்கு இருக்கும். எங்கும் வாரி இறைத்த மணல்போல் மக்கள் கூட்டம். சிறிய நாடான இலங்கையில் இருந்து வந்த எனக்கு, இவ்வளவு கூட்டம் என்பது மிகவும் பிரமிப்பைக் கொடுத்தது. இந்தக் கூட்டத்தில் தனிமனிதன் வாழ்வதற்கு எவ்வளவு பாடுபட வேண்டும்? இயற்கை மற்றும் உற்பத்தி வளங்களை எவ்வாறு ஒவ்வொருவரும் பிரிப்பது?

அபரிமிதமான இயற்கை வளங்கள் கொண்ட இலங்கை நாட்டில் இருந்து போர் காரணமாக இந்தியா வந்திருக்கும் எனக்கு, இந்தியக் கரையில் இறங்கியதில் இருந்து, இலங்கையில் தோன்றியிருக்கும் இனப்பிரச்சினையானது, தாயின் அரவணைப்பிற்காக முரண்டு பிடிக்கும் இரண்டு குழந்தைகளின் செயலோ என்ற சிந்தனையும் மனதில் தோன்றியது.

பத்து வருடங்களுக்கு முன்பு வரையும் தமிழ்நாட்டில் இருந்து எத்தனையோ தமிழர்கள் படகுகளில் (கள்ளத்தோணி) பிழைப்பதற்கு இலங்கை வந்தார்கள். அவர்களில் பலர் எனது எழுவை தீவின் ஊடாக வந்திருக்கிறார்கள். அங்கு நான் பிறப்பதற்கு முன்பே சிறு பையனாக இராமனாதபுரத்தில் இருந்து எங்கள் ஊருக்கு வந்து, வளர்ந்து இளைஞனாக

கள்ளிறக்கும் தொழில் செய்ததுடன், என்னைத் தூக்கி வளர்த்த இராமலிங்கண்ணையின் வேர்வை மணம் இன்னமும் நினைவில் இருக்கிறது.

வாட்டசாட்டமான விரிந்த தோள்கள் கொண்ட தேகம். சுருட்டைத்தலை. இருளுடன் போட்டி போடும் தோல் நிறம். ஆனால், அதில் எப்பொழுதும் மினுக்கம் இருந்தது. தோலின் துவாரங்களில் இருந்துவரும் வேர்வை கள்ளுமணத்துடன் கலந்திருக்கும். தேகத்தில் மழைக்கால ஆறாக உடலெங்கும் பெருக்கெடுத்தோடும் வேர்வையுடன் அவர் என்னை தூக்கித் தோளில் போடுவது அவரது வழக்கம்.

பலமுறை அம்மா, "குளித்துப்போட்டு அவனைத் தூக்கடா" எனக் கத்துவதும் அதற்கு இராமலிங்கண்ணை, "நீ போ உன் வேலையை பார் சின்னம்மா" எனக் கூறுவதும் எனது இளமைக்கால ஞாபகம். கள்ளத்தோணியாக பலர் வந்து தங்கி எங்கள் வீட்டில் சாப்பிட்டுவிட்டு இலங்கையின் ஏனைய பகுதிகளுக்கு தப்பிச் சென்றுவிடுவர். சிலர் பொலிசாரிடம் பிடிபடுவர். இக்காட்சிகள் சிறுவயதில் நான் பார்த்த சம்பவங்கள். இராமலிங்கம் மட்டும் பாதுகாப்பாக எங்கள் வீட்டில் பல வருடம் இருந்துவிட்டு மீண்டும் இராமநாதபுரம் சென்று தனது நாடார் சாதிப் பெண்ணைத் திருமணம் செய்ததாக பிற்காலத்தில் அறிந்தேன்.

84ஆம் வருட காலத்தில் இலங்கையில் ஓட்டோ ரிக்ஷா இருக்கவில்லை. சாணி வண்டுகளின் தோற்றத்தில் வரிசையாக எக்மோரில் அவற்றைப் பார்த்தது புதுமையாக இருந்தது. அக்கால சினிமா படங்களிலும் ஓட்டோவைப் பார்த்த ஞாபகம் இல்லை. அந்த இடத்தைவிட்டு விலகவேண்டும் என்பது குறிக்கோளாக இருந்ததால் நிறுத்தப்பட்டிருந்த ஒரு ஓட்டோ வாகனத்தில ஏறி அமர்ந்தேன்;

ஐந்தரை அடி உயரத்தில் ஒரு மெல்லிய இளைஞன் என்னை நோக்கி வந்தான். சுமார் இருபத்தைந்து வயது இருக்கும். சிறிது வாக்குக் கண் தோற்றமுள்ளவன்.

"எங்கே போகணும் சார்?" என்றபடி சிரித்தபோது அவனது கண்கள் எனக்குப் பின்னால் நின்றவரைப் பார்ப்பது போல் இருந்தது.

என்னைக் கேட்கவில்லை என்ற எண்ணத்தில் மவுனமாக இருந்தேன்

"உன்னைத்தான் சார், எங்கே போகவேண்டும்?"

படிப்பித்த ஆசிரியர்களையும் பிற்காலத்தில் பல்கலைக்கழகத்தில் கற்பித்த பேராசிரியர்களையும் தவிர்ந்த எவரையும் சேர் என சொல்லி பழக்கமில்லாத எனக்கு முன்பின் தெரியாத ஒரு இளைஞன் என்னை சேர் என்பதும் மெதுவான அதிர்ச்சியை கொடுத்தது.

"மாம்பலம் பக்கம்."

"சிலோனா இல்லை மலையாளியா சார்?"

"சிலோன்."

"குந்து சார். ஆமா எப்பிடி அங்க தமிழங்களை கொல்லுறாங்களாம் பேமானிங்க."

நான் அவனுடன் அரசியல் பேசத் தயாராக இருக்கவில்லை. மேலும், பயணக் களைப்பு வாயைக் கட்டிப்போட்டது.

"எவ்வளவு காசு?"

"என்ன காசு? நீ நம்மாளாய் இருக்கிறாய். சரி முடிஞ்ஞா துட்டைத்தா."

"இல்லை, இன்றைக்குத்தான் இந்த நாட்டுக்கு வாறன். எவ்வளவு என்று சொன்னால் நல்லதுதானே."

"இன்னா சார் நமக்குள்ளே."

"இல்லை. எவ்வளவு சொல்லப்பா."

"சரி ஐந்து ருபாய்."

எனக்கு அந்தக் கூலி சரியான கட்டணமா அல்லது கூட்டித்தான் கேட்கிறானோ என்பது தெரியாது விட்டாலும் அவனது வெளிப்படையான பேச்சில் உண்மையான தன்மை தெரிந்தது.

"எங்கே தங்கப் போற?"

"அதுதான் மாம்பலம் போகிறேன்."

"படிச்சது போல இருக்கிறாய். நல்ல ஹோட்டலுக்கு கூட்டிப் போகட்டுமா?"

"அதிகம் பணமில்லை; ஆனாலும் சுத்தமாக இருந்தால் சரி."

"நாற்பது ரூபாயில் எல்லாம் இருக்கு. நல்ல வசதி."

உண்மையில் அவன் காண்பித்த அந்த ஹோட்டலில் அடிப்படை வசதிகள் இருந்தன. உடல் அலுப்புத் தீர குளித்துவிட்டு கீழே இருந்த சாப்பாட்டு கடைகளை தேடினேன். பெரும்பாலானவை சைவ உணவகங்களாக இருந்தன.

எழுவை தீவில் பிறந்து வளர்ந்தபோது மீன் குழம்பு, மீன் சொதி, மீன் பொரியல், கத்தரிக்காய் பால்கறி அல்லது முருங்கைக்காய் மட்டும் உண்டு வளர்ந்ததால் எங்கு சென்றாலும் அசைவ உணவைத் தேடுவது எனது பழக்கமாகிவிட்டது. வெள்ளிக்கிழமை மச்சம் மாமிசம் சமைக்காத நாட்களில் குறைந்தபட்சம் பரணில் இருந்த கருவாட்டை நெருப்பில் சுட்டோ அல்லது முட்டையை பனை ஓலையில் வைத்து எரித்த பின்போதான் சாப்பிடுவது வழக்கம். ஆடி அமாவாசை போன்ற நாட்களில் மரக்கறி உணவும் வெந்தயக் குழம்பும் தொண்டைக்குள் கசாயம்போல் இறங்கும்.

கப்பல் ஏறுவதற்கு முன்பு கடைசியாக மன்னாரில் மாமி கயல் மீனின் பொக்கணங்களை தனியே எடுத்து குழம்பு வைத்து எனக்கு விருந்து வைத்திருந்தா. இராமேஸ்வரத்தில் இறங்கிய நாளில் இருந்து கிட்டத்தட்ட நாற்பத்தியெட்டு மணிநேரமாக மச்சம், மாமிசம் கண்ணில்கூட படவில்லை. இரயிலில் குறைந்தபட்சம் மாமிச மணமாவது மூக்கையடையாதா என்று நினைத்தேன். தயிரும் சாம்பாரும் புளியோதரையுமாக நான் பயணித்த ரயில் மணம்



பரப்பியது.

மச்சம் மாமிசத்திற்காக வேறு வழியில்லாமல் அரை மணித்தியாலம் நடந்து ஒரு மதுரை முனியாண்டி விலாஸை கண்டுபிடித்தேன். சென்னையில் அக்காலத்தில் மதுரை முனியாண்டி அல்லது கேரளத்து முஸ்லிம்களது கடைகள்தான் என் உயிருடன் உடலை ஒட்டவைத்தன.

மத்தியானம் படுத்துவிட்டு படம் பார்க்கவேண்டும் என நினைத்தவாறு, ஹோட்டல் ஜன்னலால் வெளியே பார்த்த போது இலங்கை எதிர்கட்சித் தலைவர் என்ற எழுத்துக்கள் தூரத்தே தெரிந்த போஸ்டரில் தென்பட்டது. அமிர்தலிங்கம் அவர்களைக் குறிப்பதாக இருந்தாலும் எனக்கு அப்பொழுது செல்வநாயகம்தான் நினைவுக்கு வந்தார்.

ஏழு அல்லது எட்டு வயது எனக்கு இருக்கும் காலத்தில் ஒரு தேர்தல் நடந்தது. அப்பொழுது தமிழரசுக் கட்சித் தலைவர் செல்வநாயகம் அக்கால தீவுப்பகுதி பாராளுமன்ற உறுப்பினர் வீ.ஏ. கந்தையாவுடன் எழுவை தீவுக்கு வந்தபோது எங்கள் வீட்டிற்கும் வந்தார். எனது தாய்வழிப் பேரனார் நமசிவாயம் ஓய்வு பெற்ற வாத்தியார். அத்துடன் தபாலதிபராகவும் இருந்தவர். தீவுப்பகுதியில் மோட்டார் வள்ளங்களை ஓட்டியவர்கள் சங்கத்தில் முக்கியமானவர். இதனால், எங்கள் வீட்டுக்கு செல்வநாயகம் வந்தபோது தனது சாய்மனை கதிரையில் அவரை அமரச் சொல்லிவிட்டு எதிரில் இருந்த ஆசனத்தில் அமர்ந்தார். அவருக்குப் பக்கத்தில் வீ.ஏ. கந்தையா அமர்ந்தார்.

செல்வநாயம் மிகவும் மெதுவான குரலில், "வாத்தியார் இந்த முறையும் தமிழரசுக் கட்சிக்குத்தான் நீங்கள் போடவேண்டும். உங்கள் உதவி வேண்டும்" என்றார்.

"ஐயா இதற்காக ஏன் நீங்கள் போட் ஏறி வந்தீர்கள். ஒரு கங்கு மட்டையை தமிழரசுக் கட்சியென்று நிறுத்துகள். உங்களுக்கு ஊர்சனம் போடும்."

"அது எனக்குத் தெரியும். உங்களையும் பார்க்க வந்தேன். மேலும், சிலர் மற்றவர்களுக்கு வேலை செய்வதாக கேள்விப்பட்டேன்."

"சில நாய்கள் சாராயத்தை நக்குவதற்காக காசை வேண்டியிருக்கும். அதைப் பற்றி கவலைப்படாதீர்கள்."

இந்த சம்பாசணையை என்னோடு எங்களது ஊரில் பலர் எங்களது வீட்டு கொட்டகையில் நின்று கேட்டுக்கொண்டு இருந்தார்கள்.

தமிழரசுக் கட்சித் தலைவர் செல்வநாயகமும் வீ.ஏ. கந்தையாவும்; எங்கள் வீட்டில் மதிய உணவு அருந்திவிட்டு மாலை நேரத்து மோட்டார் போட்டில் போய்விட்டார்கள்.

இதன்பிறகு அடுத்த கிழமை தமிழ்க் காங்கிரஸ் காரர்கள் ஊரில் உள்ள சிலரைப் பிடித்து ஒரு கூட்டத்திற்கு ஒழுங்கு பண்ணியிருந்தார்கள். எங்கள் ஊரில் அந்தக் காலத்தில் மின்சாரம் இல்லாதபடியால் பெட்ரோல்மக்ஸின் ஒளியில்தான் இரவில் கூட்டம் நடத்தவேண்டும்.

அந்தக் கூட்டத்திற்கு பத்துக்கும் குறைவானவர்கள் தான் போயிருப்பார்கள். ஆனால், கூட்டத்திற்கு ஒளி கொடுத்த பெட்ரோல்மக்ஸ் மீது சரியாக குறி பார்த்து கல்லெறிந்தபடியால் அந்தக் கூட்டம் கலைந்தது.

அந்தக் கூட்டத்தைக் கலைத்தவர்கள் எங்களது உறவினர்கள். மேலும், அவர்கள் நமசிவாயம் வாத்தியாரால் கண்டுபிடிக்கப்பட்டு திட்டப் பட்டார்கள். இதைவிட முக்கியமான விடயம் முழு எழுவை தீவிலும் தமிழரசுக் கட்சிக்குதான் ஆதரவு. ஆனால், எப்படி சிலபேர் மட்டும் தமிழ் காங்கிரஸ் பக்கம் சாய்ந்தார்கள்? அதற்குக் காரணம் இருந்தது. சிலருக்கு நமசிவாயம் வாத்தியாரை பிடிக்காது. அதனால், அவர்கள் எதிர்கட்சியின் பக்கம் நின்றார்கள்.

இந்தச்சிறு சம்பவம் பல விடயங்களை பிற்காலத்தில் எனக்குப் புரியவைத்தது. ஒரு பிரபலமான கட்சியை அரவணைத்துப் பிடித்தால், அதன் சார்பாக வாக்குக் கேட்பவர்களுக்கு எந்தவிதமான அறிவோ திறமையோ

ஏன் ஒழுக்கமோ கூடத் தேவையில்லை. எனது பாட்டனார் நாற்பது வருடகாலமாக ஆசிரியராகவும் தலைமையாசிரியராகவும் இருந்தவர். அத்துடன் பெரிய மனிதராக அக்காலத்தில் தீவுப் பகுதியெங்கும் அறியப்பட்டவர். அவரே தமிழரசுக் கட்சி சார்பாக கங்கு மட்டைக்கும் போடுவோம் என்கிறார்.

பெட்ரோல்மாக்ஸ் மீது கல்லெறிந்த வன்முறை அக்காலத்தில் அற்பமாக இருந்தாலும் பிற்காலத்தில் நடந்த துப்பாக்கிப் பிரயோகங்களுக்கு ஒப்பானதுதான்.

என்ன.... புடையன் பாம்பு அக்காலத்தில் குட்டியாக இருந்தது அவ்வளவுதான்.

நமசிவாயம் வாத்தியார் சொல்லாமலே வன்முறை நடந்தது. இதை நமசிவாய வாத்தியாரும் வரவேற்பார். உத்வேக உணர்வில் கல்லெறி நடந்தது.

இவை எல்லாவற்றிலும் முக்கியமானது - அக்காலத்தில் தமிழரசுக் கட்சியினருக்கு எதிர்கட்சியாக வேறு எந்தவொரு சிங்களக் கட்சியும் அங்கே இருக்கவில்லை. தமிழ் காங்கிரஸ் சார்பாக ஒரு சிலர் அங்கு வேலை செய்தது தமிழரசுக் கட்சியினருக்கு பொறுக்க முடியாததாக இருந்தது.

நமது ஊர் அரசியலை மூட்டை கட்டிவிட்டு அருகில் உள்ள தியேட்டரில் படம் பார்ப்போம் என பாண்டிபசாரை நோக்கி நடந்தேன். சிறிது தூரம் கூடச் செல்லவில்லை. எதிர்பார்க்காத காட்சியொன்று எனக்காக காத்திருந்தது. மக்கள் வட்டவடிவமாக தெருவை வளைத்து கூட்டமாக நின்றார்கள். நானும் உட்புகுந்து பார்த்தபோது திரைப்பட சூட்டிங் நடப்பது தெரிந்தது.

படம் பார்க்க தியேட்டர் போக நினைத்த எனக்கு வழியில் படம் எடுப்பதைப் பார்க்கும் சந்தர்ப்பம் வாய்த்தது. வாழ்க்கையில் முதன்முறையாக திரைப்படம் எடுப்பதை பார்க்கும் வாய்ப்பு சென்னைக்கு வந்த முதல்நாளே கிடைத்திருக்கிறது. நான் எந்தப் படத்திலும் பார்க்காத நடிகர் ஒருவர், பொலிஸ் இன்ஸ்பெக்டர் உடையில் பாய்ந்து, ஒருவரை பல முறை வித்தியாசமான கோணத்தில் காலால் உதைத்து அடித்துக் கொண்டிருந்தார். நல்ல கறுப்பு நிறம், கட்டுமஸ்தான தேகம். கண்கள் மட்டும் சிவப்பாக இருந்தது. கண் விழிகளில் சிறு இரத்த நாளங்கள் தெரிந்தன. இவ்வளவு காலமும் திரையில் பார்த்த கதாநாயகர்களின் தோற்றத்திற்கு நேர் எதிராக அவரது தோற்றம் இருந்தது எனக்கு வியப்பைத் தந்தது.

பக்கத்தில் நிற்பவரிடம் "யார் இவர்?" எனக்கேட்டேன்.

அந்த மனிதர் என்னை வேற்றுலகவாசியாக விசித்திரமாக பார்த்து விட்டு, "விஜயகாந்து சார்" என்றார்.

"புது நடிகரா?"

"இரண்டாவது படம். ஆமா சார், நீ எங்கே இருந்து?"

"சிலோன்காரன்."



"அப்படியா சார் அதான் தமில் டிபரண்டாக இருக்கு. நான் மதுரை பக்கமோ என நினைத்தேன். நம்ம விஜயகாந்த் இங்கு பக்கத்திலதான் இருக்கிறார். அவருக்கு இலங்கையர் மேல் மிகுந்த அன்பு" என தொடர்ந்து பேசினார்.

விஜயகாந்த் பலதரம் பாய்ந்து பாய்ந்து அடித்தார். இடையில் கட் கட் சொன்னார்கள். ஒவ்வொரு அடிக்கும் விஜயகாந்தை குறைந்தது ஐந்து முறை பாய்ந்து அடிக்க வைத்தார்கள். சினிமா எடுப்பதைப் போன்ற போர் அடிக்கும் விடயம் வேறு எதுவும் இருக்குமா என நினைத்தேன். ஒவ்வொரு விடயத்தை யும் பல முறை ஒருவர் செய்யவேண்டி இருந்தது. சடலத்தைக்கூட பல தடவை சூட்டிங் எடுக்க வேண்டி வரும் என நினைத்தேன். அன்றே சினிமா சூட்டிங் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் மனதை விட்டு அகன்றது. விரைவாக அந்த இடத்தைவிட்டு விலகி தியேட்டருக்குள் நுழைந்தேன்.

எதுவும் பிரயோசனமாக செய்வதற்கு இல்லை என நினைத்தால் - வெய்யில் மழை மற்றும் வெக்கை என்பனவற்றில் இருந்து ஒதுங்குவதற்கு சினிமா தியேட்டர் எனக்கு புகலிடமாகியது. பிற்காலத்தில் பலதடவை நேரம் போக்குவதற்காக மட்டுமே தமிழ் சினிமாவை பயன்படுத்தினேன். நான் நினைக்கிறேன் தமிழ் சினிமாவின் முதலாவது நோக்கமும் அதுவாகத்தான் இன்னமும் இருக்கிறது. சில வேளையில் அதுவே இறுதி நோக்கமாகவும் உள்ளது.

இலங்கைத் தமிழரை இந்தியத் தமிழரோடு இணைப்பது, பாக்கு நீரிணைக்கு அடுத்ததாக இந்த தமிழ் சினிமா. சங்கிலியாக தொடர்ந்து வருகிறது. அரசியல், மொழி, சங்கீதம், மதம் என்பனவெல்லாம் இரண்டாம் பட்சமானவை. ●

(தொடரும்)

**நடேசன் <uthayam12@gmail.com>**

கவிதை

# கவிதைக்கும் விதி உண்டு

**வைதீஸ்வரன்**



காலையோ மாலையோ என்ற
அக்கறையில்லாத இதமான மிதவெளிச்சத்தில்
குளிரும் வியர்ப்புமற்ற காற்றோட்டத்தில்
மௌனம் துயில்கின்ற மன வெளியில்
பறந்து வந்த சிறகு போல்
கையில் படிந்த காகிதமொன்றிலிருந்து
கண்ணுக்குத் தாவும் போது
கவிதையின் நன்மொழிகள்
உணர்வில் படர்ந்து
சுகம் சிலிர்க்கிறது நினைவெங்கும்
நெடுநேரம்...
இரைந்த சில்லறைகளைப்
பங்கு பிரிக்கப் பாடுபடும் வெறிமூண்ட வேளைகளில்
எனக்கும் உனக்குமுள்ள வித்யாசங்களை
விரித்து விரோதத்தைப் பெருக்கும் மூர்க்கமான சமயங்களில்
நிலத்தை மாற்றி மாற்றிப் பிடுங்கி விளையாடும்
கபடி ஆட்டத்தின் மூச்சுப் பதற்றத்தில்
கவிதைகள் கிழிந்து கந்தலாகி
எழுத்துக்கள் சாக்கடைக்குள்
இரண்டறக் கலந்து மீளாமல்
மீண்டும் மாய்ந்து போகின்றன. ●

**வைதீஸ்வரன் <vydheesw@yahoo.com>**

நூற்றாண்டு சிறப்புக் கட்டுரை

(1920 - 2020)

# பெடெரிகோ ஃபெலினி
# தன்னை அறிதலின் கலைஞன்

**மூலம்: பிளேபாய் இதழ், பிப்ரவரி 1966 தமிழில்: ஸிந்துஜா**

நீங்கள், 'எனக்கு சிவப்பாக, நீலக் கண்களுடன், ரோஜா நிறக் காதுகளுடன், பொன்னிற முடியுடன், ஏழு பவுண்டு மூன்று அவுன்சு எடையுடன், சிறந்த விரல்களுடன் குழந்தை பிறக்க வேண்டும்!' என்று சொல்ல முடியாது. நீங்கள் மணந்துகொண்ட பெண்ணுக்கு பிரசவ சமயத்தில் உதவி புரியலாம். ஆனால், குழந்தை எப்படிப் பிறக்கிறதோ அப்படித்தான் இருக்கும். அது உங்களுக்கு விதிக்கப்பட்டது. குழந்தை பிறக்கும்போது, 'அதற்கு நீலக் கண்கள் இல்லை. அது கருப்பைக்குள் போகட்டும்' என்று நீங்கள் கூற முடியாது. - ஃபெலினி

ஃபெலினி, வணிகத் திரைப்படச் சூழலுக்கு மாற்றாக புதிய திரைப்பட உலகை உருவாக்க முயன்றவர்களில் முக்கியமானவர். பொது மக்களை அடிமைப்படுத்தி, கேளிக்கைப் படங்களைத் தொடர்ந்து வெளியிட்ட திரைப்படத்துறையை நிராகரித்து, மக்களின் மனசாட்சியை உலுக்கும், கேள்வி கேட்க வைக்கும் படங்களை ஃபெலினி தயாரித்தார். கனவையும் நிகழ்காலத்தையும் ஒன்று சேர்த்தும், சுயசரிதையோடு கற்பனைக் கதையைக் கலந்தும், தன்னுடைய படைப்பாற்றலை சொந்த வாழ்க்கையின் பிரச்சினைகளோடு இணைத்தும், அவர் தயாரித்த படங்கள் பெரும் புகழைத் தேடிக் கொடுத்தன.



ஃபெலினி எடுத்த 'ஓட்டோ யீ மெஸ்ஸோ' என்ற மனநலப் பகுப்பாய்வுத் திரைப்படம் அவரை ஒரு முன்னோடி இயக்குனராக வெளி உலகத்துக்குக் காட்டியது. அப்படத்தின் அடிச்சரடை வைத்து அதை ஒற்றி எழும் மனநலப் பிரச்சினைகளை வைத்து இன்றும் பல திரைப்படங்கள் தயாரிக்கப்பட்டு வருகின்றன. இருபத்து மூன்று முறை அவரது படங்கள் அகாதெமிப் பரிசுக்குப் பரிந்துரைக்கப்பட்டு எட்டு முறை பரிசுகளை பெற்றுள்ளன. 1993இல் ஃபெலினிக்கு திரைப்பட சாதனையாளருக்கான ஆஸ்கர் விருது வழங்கப்பட்டது. 1985இல் வெனிஸ் திரைப்படத் திருவிழாவில் 'கோல்டன் லயன்' வாழ்நாள் சாதனையாளர் பரிசு அவருக்கு வழங்கப்பட்டது.

1966இல் பிளேபாய் இதழ் ஃபெலினியைப் பேட்டி கண்டது. திரைப்படம் சார்ந்தது மட்டுமில்லாமல், மத இணக்கம், வாழ்வின் நிலையாமை, சமூகத்தின் கட்டுப்பாடுகள், அவை தனி மனிதனைப் பாதிப்பது எவ்வாறு, பாலுணர்வுச் சுதந்திரம், திருமணமும் ஆண்களும் பெண்களும் போன்ற வெவ்வேறு விஷயங்களில் அவர் கொண்டிருந்த திடமான ஆழமான, சில சமயம் அதிர்ச்சியளிக்கும் சிந்தனைகளை இந்த நீண்ட பேட்டியில் ஒருவர் காணலாம்.

**உங்கள் நண்பர்களுக்கு மத்தியில் நீங்கள் ஒரு பெரிய கதை சொல்லி என்ற பெயர் இருக்கிறது. ஆனால், அதில் ஒருவர், 'நீங்கள் ரீல் விடுவதையும் உண்மையைப் போல் முழுநிறைவு அளிக்கும் விதத்தில் சாதித்துக் காட்டிவிடுவீர்கள்' என்று கூறியிருக்கிறார்.**

*'முழுநிறைவு' என்றா சொன்னார்? அது போதும் எனக்கு. என்னைப்போல் கற்பனையுலகில் பெரும் பொழுதைச் செலவழித்துக் கொண்டிருப்பவன் அசாதாரணமான கட்டுப்பாடுடன் இருந்தால்தான் உண்மையை மட்டுமே தெரிவிப்பவனாக இருப்பான். இதனால்தான் ஒரு நீதிமன்றத்தின் முன்னால் நான் சகிக்கப் போதாத சாட்சியாகப் பார்க்கப்படுவேன். ஒரு பத்திரிகையாளனாகவும் அப்படியே. நான் என்ன பார்த்தேனோ, அதை நான் விரும்பும் வண்ணம்தான் சொல்ல முடியும். நடந்ததை அப்படியே டாக்குமெண்டரியாக விவரிப்பது எனக்குக் கடினம்.*

**உங்கள் சொந்த வாழ்க்கையைப் பற்றிக்கூட நீங்கள் கதை விடுவதாகக் கூறுகிறார்கள். உங்கள் முதல் காதலியைப் பற்றி நாலைந்து வித்தியாசமான கதைகளை அந்தந்த சந்தர்ப்பத்தில் சொல்லியிருப்பதாக இன்னொரு நண்பர் கூறியிருக்கிறார்.**

*ஏன் கூடாது? இன்னும் எத்தனையோ கதைகளை அவள் மேல் சொல்லலாம்! எப்பேர்ப்பட்ட பேரழகி அவள்? அவளைப் போல் இல்லாத சாதாரணப் பெண்கள் மீதும்கூட ஜனங்கள் உண்மைக்கு மாறாகப் பொய்யுரைத்துப் பேசுகிறார்கள். அதனாலென்ன? இதற்காக நீங்கள் என்னைப் பொய்யன் என்று கூறினால் எனக்குக் கவலையில்லை. ஒரு கதை சொல்லி அவன் சொல்லும் கதையின் பரிமாணத்தை விரித்தும் ஜோடித்தும் கற்பனையைக் கலந்தும் சொல்ல அவனுக்கு முழு உரிமை இருக்கிறது. என் படங்களில் வாழ்க்கையை இப்படித்தான் சித்தரிக்கிறேன்.*

உங்களைப் பலர் பலவிதமாக - மந்திரவாதி, சர்க்கஸ் ரிங் மாஸ்டர், சமூகத்தை நையாண்டி செய்பவர், நவீன ஒழுக்கவாதி என்றெல்லாம் - கூறினாலும் நீங்கள் ஒரு கதை சொல்லி மட்டும்தான் என்கிறீர்களா?

இதெல்லாம் சுவாரஸ்யமான பதவிகள்தான். ஆனால், அடிப்படையில் நான் ஒரு கதை சொல்லி. அதற்கு சினிமாவை ஒரு சாதனமாகப் பயன்படுத்துகிறேன். நான் சினிமாவை விரும்பக் காரணம், அது வாழ்க்கையைத் திரும்ப உருவாக்க முயலுகிறது. பெரிதாகவும் விரிவாகவும் காட்டுகிறது. எனக்கென்னவோ ஓவியத்தை விட, இசையை விட, இலக்கியத்தை விட சினிமா வியக்கத்தக்க வகையில் வாழ்க்கையைத் திரும்ப எடுத்துக் காட்டுகிறது. அது வெறும் கலை உருவம் மட்டுமல்ல. வாழ்க்கையின் புதிய உருவத்தைப் படைக்கிறது. வாழ்வின் ஏற்றத்தை, முன்னோக்குதலை வெளிப்படைத்தன்மையை சினிமா அதன் இயல்பான கவித்துவ முறையில் எடுத்துச் சொல்ல முயலுகிறது. நான் இந்த முறையில்தான் கதையைச் சொல்லுகிறேன்.

பெரும்பாலான விமரிசகர்கள் உங்கள் கதை சொல்லும் 'உத்தி' ஈடு இணையற்றது என்று ஒப்புக்கொள்ளும் அதே சமயத்தில், நீங்கள் சொல்லும் செய்திகள், தெரிவிக்கும் நீதிகள், அவற்றின் அர்த்தங்கள் ஆகியவற்றை எதிர்க்கிறார்களே?

இந்த விமரிசகர்களுக்கு என் படங்கள் புரிகின்றனவா என்ன? மக்கள் என் படங்களை ரசிப்பது போதாதா?

உங்கள் படங்கள் கேளிக்கைகளை முதன்மையாக வைத்தா எடுக்கப்பட்டன? அவற்றின் வசூல் நிலைமை படங்களின் தத்துவ முனைப்புக்கு முன்னால், இரண்டாம் பட்சமாகத்தானே இருக்க வேண்டும்?

நான் பிரபலத்தைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. தத்துவ முனைப்பு பற்றி பேசுவது நேர விரயம். ஒவ்வொரு படமும் முடிந்த பிறகு அதன் நோக்கங்கள் என்னவாக இருந்தன என்று நான் கவலைப்படுவதில்லை. நோக்கங்கள் உங்கள் முயற்சிகளை எடுத்துச் செல்லப் பயன்படுபவை. மிகச் சிறந்த ஆக்கங்கள் அவற்றின் 'மூல முதலான' நோக்கங்களிலிருந்து வேறுபட்டு வெளி வந்தவை. பிளெய்ஸ் பாஸ்கல் அவருடைய 'நினைவுகள்' தொகுப்பைத் தர நினைத்த போது, 'கடவுள் என்று யாரும் கிடையாது' என்ற நிலைப்பாட்டை அவரது மனம் கொண்டிருந்தது. ஆனால், 'நினைவுகள்' தொகுப்பு வெளிவந்த போது அது அதற்கு எதிரான கருத்துக்களைக் கொண்டிருந்தது.

'லா டோல்சே விட்டா' (நல்வாழ்வு) படத்தை எடுத்துக்கொள்ளுங்கள். நான் எடுக்க நினைத்தது ரோம் நகரின் ஆத்மா எப்படி இருந்தது என்பது பற்றியும், மக்கள் எவ்வாறு நடந்துகொள்கிறார்கள் என்பது பற்றியும்தான். ஆனால், கடைசியில் வெளி வந்தது என்னவோ ஓர் இழிவான அறிக்கை. ஒரு நகரத்துக்குப் பதிலாக அது சித்தரித்தது ஒரு சுவரோவியத் தெருவை.

செழிப்பு நிறைந்த வாயா வினிஸ்ட்டே தெருவுக்கு நான் போகமாட்டேன். நான் பணக்காரர்கள் நடத்தும் விழாக்களில் பங்கு பெறுவதில்லை. ஏன் அப்படி என்று எனக்குத் தெரியாது. இடதுசாரிப் பத்திரிகைகள் அந்தப் படம் ரோம் நகரைப் பற்றியது என்று எழுதினார்கள். அது ரோம் நகரமாக இருக்க வேண்டியதில்லை. அது பாங்காக் அல்லது அதைப் போன்ற ஆயிரக்கணக்கான நகர்களில் ஒன்றாகக்கூட இருக்கலாம். அதை நான் சோடாமையும் கொமோராவையும் பற்றிய படமாக, எதிர்பார்ப்பையும் ஏமாற்றத்தையும் சித்தரிக்கும் படமாக, எடுக்க நினைத்தேன். நான் ஒரு ஆவணத்தை உருவாக்க விரும்பினேன். டாக்குமெண்டரியாக அல்ல.

உங்கள் படங்களில் காணப்படும் பொதுச் சரடு என்ன?

என் தேடுதலைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக நான் என் வாழ்வில் சந்தித்தவற்றை என் படங்கள் பேச வேண்டும்.

எதற்காக இந்தத் தேடல்?

என்னை நானே என்னிலிருந்து விடுவித்துக்கொள்வது பற்றி. இப்படிப் பார்க்கும் போது என் படங்களுக்கு இடையே உள்ளடக்கத்திலோ, பாணியிலோ எந்தவித வித்தியாசமும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. என் கடந்த கால வாழ்க்கை, என் மீது திணிக்கப்பட்ட படிப்பு ஆகியவற்றிலிருந்து விடுபடுவது; என்னை விடுவித்துக்கொள்வது பற்றித்தான் என் படங்கள் ஆரம்ப காலம் முதல் இன்று வரை பரிசீலித்த வண்ணம் உள்ளன. பலவிதமான பாத்திரங்கள், அவை வெளிப்படுத்தும் சாயல்கள், நெருக்கடிகள் இவற்றிலிருந்து என்னை நான் அறிந்துகொள்ள விரும்புகிறேன்.

எந்த மாதிரி உங்கள் கடந்த கால வாழ்க்கையிலிருந்து தப்பிக்க வேண்டும் என்று விரும்புகிறீர்கள்?

எனது இளம் பிராயத்தில் என் மீது திணிக்கப்பட்ட பிரயோஜனமில்லாத சுமைகளை என் முதுகிலிருந்து இறக்கி வைத்துவிட விரும்புகிறேன். அர்த்தம் இழந்த சப்தங்களினால் உருவாக்கப்பட்ட கோட்பாடுகளை பற்றி எனக்குத் தெரிந்தவற்றை உதற விரும்புகிறேன்.

இதன் மூலம் எனக்குப் புதிய வாழ்க்கையும் புதிய 'நானு'ம் தரும் ஒரு கன்னித்தன்மை கிடைக்கலாம்.

யாருக்கும் பொருந்தாத, ஆனால், எல்லோரையும் கட்டிப் போடும் ஓர் ஆகிருதியிடமிருந்து தப்பிச் செல்ல விரும்புகிறேன். இன்று நான் செல்லுமிடங்களில் இளைஞர்கள் கூட்டமாகத் திரிவதை ஓரக்கண்ணால் பார்க்கிறேன். ஆனால், நான் இளைஞனாக இருந்த போது என் வயதையொத்தவர்கள் வெவ்வேறு திசைகளில் தனித் தனியாகப் பயணித்தோம். நாம் ஒரு எறும்புக் கூட்டத்தை சமூகமென்று கட்டமைக்க முயலுகிறோமா? மற்ற எந்த விஷயத்தைக் காட்டிலும் இதுதான் என்னை மிகவும் அச்சப்படுத்துகிறது. மனிதனின் மேன்மையும் உயர்வும் கூட்டத்திலிருந்து விலகித் தனித்துச் செயல்படுவதில்தான் இருக்கிறது. அவன் எவ்வாறு இந்தக் கூட்டத்திலிருந்து தன்னைப்



ஃபெலினிக்கு வாழ்நாள் சாதனைக்காக கௌரவ ஆஸ்கார் விருது வழங்கப்பட்ட போது. உடன்: சோபியா லோரன், மார்செல்லோ மஸ்ட்ரோயானி.

பிரித்துக்கொள்கிறான் என்பதை அவனது போராட்டமும் எதிர்கொள்ளும் பிரச்சினைகளும் தீர்மானிக்கின்றன. இவற்றைத்தான் என் படங்கள் விசாரிக்கின்றன.

இதற்கு உங்கள் படம் ஒன்றின் மூலம் உதாரணம் தர முடியுமா?

'8½' படத்தில் சமூகம் விதிக்கும் நியதிகளால் பதிக்கப்படும் அதன் கதாநாயகன் கிடோ, அவனது இளமையில் எதிர்கொள்ளும் குற்ற உணர்வு, ஏமாற்றங்கள் ஆகியவை பற்றி விவரித்திருக்கிறேன்.

நாமெல்லோரும் இளமையில் ஒரே மாதிரியான கல்வி முறையினால் அடக்கப்பட்டவர்கள். நாம் வளர்ந்து பெரியவர்களாக ஆகும் போது நாம் சந்திப்பது மோதல்களை! நமக்குக் கற்பிக்கப்பட்ட நற்குணங்களின் மேன்மை, லட்சியவாதங்கள், நீதி போதனைகள் ஆகியவை எல்லாம் நாம் தொடர வேண்டிய வாழ்க்கையில் இடம்பெறுவதில்லை. நாம் சந்திக்கும் நிதர்சன வாழ்வு இப்போதனைகளுக்கு எதிராக இயங்கி நமக்கு ஒருவித மன அதிர்ச்சியையும் ஏமாற்றத்தையும் தருகின்றது. ஒரு சாதாரண மனிதனின் இயல்பான வாழ்க்கையை உருத் தெரியாமல் அடித்து விடுகின்றது. போதிக்கப்பட்டவை, நடைமுறை வாழ்க்கைக்குச் சற்றும் சம்பந்தமில்லாதவை என்பதை அதிர்ச்சியுடன் உணருகிறோம். இது நம் எல்லோரின் வாழ்க்கையிலும் நடக்கிறது.

பள்ளியில் கற்றுக்கொண்டதும் வீட்டில் சொல்லித் தந்ததும் தேவாலயத்தில் அறிவுறுத்தப்பட்டதும் உண்மையிலிருந்து வெகு தூரம் விலகி நிற்பதைப் பார்க்கிறீர்கள். கற்றவை எல்லாம் உங்களின் உண்மையான இருப்பை, உள்ளுணர்வை, வளர்ச்சியைத் தடுத்தாட் கொள்ளுகின்றன என்பது உங்களுக்கு உறைக்கிறது. இதனால் இறுதியில் ஒரு பிளவு உண்டாகிறது: ஒன்று, அவற்றை எதிர்த்துப் போராட வேண்டும் அல்லது அவற்றின் முன்னால் மண்டியிட்டு சரணடைந்துவிட வேண்டும்.

நீதிபோதனை உருவாக்கும் லட்சிய நிலைக்கும், மனக்கிளர்ச்சி காணும் யதார்த்த நிலைக்கும் இடையே எப்போதும் ஒரு போராட்டம் நடக்கிறது. இது கிரேக்கர்களிடமிருந்து ஆரம்பித்த ஒன்று. உடல் சார்ந்த அழகை முன்னிறுத்துவதை கிரேக்கர்கள் கொண்டாடினார்கள். அதனால், அழகற்ற ஒருவர் விலக்கப்பட்டவராகவும் தாழ்த்தப்பட்டவராகவும் வெளியாளாகவும் கருதப்பட்டார். பிறகு கிறிஸ்தவம் நெறி சார்ந்த அழகியலை முன்னெடுத்தது. இது மேலும் ஒரு சிக்கலில் உங்களை மாட்ட வைத்தது. நீங்கள் கிரேக்கக் கடவுளை போல் அழகானவரல்ல; கிறிஸ்துவ

சமயம் எடுத்தாண்ட தூய மனிதனாகவும் நீங்கள் இருக்கவில்லை. அழகின்மையும் புனிதமின்மையும் கொண்டு அவமதிப்புடன் வாழ வேண்டிய பிரகிருதியாக நீங்கள் ஆகிவிட்டீர்கள். மனிதர்களும் உங்களை விரும்புவதில்லை, கடவுளும் கூட. எனவே, நீங்கள் வாழ்வுக்கு வெளியே நிற்க வேண்டியதாயிற்று.

இன்று?

சற்று மாறுதலான முறையில் அதே சிக்கல்கள் தொடர்கின்றன. இதிலிருந்து தப்பிக்க முயன்றவர்கள் வெற்றியைச் சந்திக்கவில்லை. இதிலிருந்து தப்பிக்க ஒரு சாதாரண வழி இருக்கிறது. நீங்கள் அழகானவரில்லையா, அதனாலென்ன? போனால் போகட்டும். நீங்கள் தூயவரில்லையா? சரி, அப்படியே இருந்து விட்டுப் போகட்டும். இப்படிச் சொல்லும் மனநிலையைப் பெற வேண்டுமென்றால் உங்களை நீங்கள் பரிபூரணமாக அறிந்துகொள்ள வேண்டும்.

'தன்னை அறிந்து உணர்தல்' வாழ்வில் வளர்ச்சியையும் சுபீட்சத்தையும் கொண்டு வரும். நமது இளமையில் நம் மீது நடந்த மூளைச் சலவையிலிருந்து உருவாக்கப்பட்ட, பொய்களும் கற்பனைகளும் கட்டுக் கதைகளும், அடைய முடியாத, ஆனால், நிர்பந்தப்படுத்தப்பட்ட ஒழுக்க சீலங்களும் புனிதங்களும், 'தன்னை அறிந்து உணர்தல்' ஏற்படும் போது உங்களை விட்டு விலகிச் சென்றுவிடும்.

உங்கள் பழைய வாழ்க்கையிலிருந்து விடுதலை பெற்ற பின் அடுத்தது என்ன?

நீங்கள் உங்களுடைய வாழ்க்கையை வாழ முடியும். ஒரு கோழையைப் போல சென்ற காலத்தைப் பற்றிய கனவுகளில் புதையுண்டு கிடப்பதிலிருந்து அல்லது எதிர்காலத்தைப் பற்றிய கனவுகளில் மூழ்கிக் கிடப்பதிலிருந்து விடுதலை அடையலாம்.

எதிர்காலத்தில் என்றால் எப்படி?

எதிர்காலத்தில் நாம் என்னவாக இருப்போம் என்று கற்பனை செய்துகொள்வது, அதற்கு ஆயத்தப்படுத்திக்கொள்வது, திட்டங்கள் தீட்டுவது, எதிர்காலம் என்னவோ நம் கட்டுப்பாட்டில் இருந்து நம்மால் கட்டி ஆள முடிந்த ஒன்று என்னும் பிரமையில் ஆழ்ந்திருப்பது - இவைகளைத் தவிர்த்துவிட வேண்டும். எதிர்காலம் நமக்கு வெளியே இருப்பது அல்லது நம்மைக் கடந்து நிற்பது என்பது நமது கற்பனையே. என்ன நடக்குமோ அதை நாம் எதிர்கொள்ள வேண்டும் என்பதுதான் நாம் கற்க வேண்டிய பாடம். அதைப் பற்றி அஞ்சிக் கொண்டிருப்பதோ

அல்லது என்னவாகுமோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருப்பதோ அல்ல. எதிர்காலம் என்பது ஏற்கனவே இங்கு இருப்பதுதான். இன்றே அதனுடன் வாழ்வதுதான். விழித்திரு! வாழ்ந்திரு!!

உங்களின் பெரும்பாலான கதாநாயகர்கள் அவர்களின் ஆன்மீகத் தேடலுக்குப் பின் தம் வாழ்க்கையைத் தாம் அறிந்த வண்ணம் வாழ விரும்புகிறார்கள்; என்றாலும் பலர் இதையே விதியின் வழி செல்லும் விழிப்புணர்வாகத்தானே காண்கிறார்கள்?

இல்லையில்லை. விதியின் வழியல்ல. வாழ்க்கையின் நியதியைப் புரிந்துகொண்ட அனுபவத்துடன் அவர்கள் தாங்கள் அமைத்துக்கொண்ட வாழ்க்கையை நேசிப்பவர்களாக விளங்குகிறார்கள். '8 லு' படத்தில் கிடோ தனது பழைய வாழ்க்கைக்குத் திரும்புவது என்பது தோல்வி அல்ல. உண்மையில் அது வெற்றி பெற்றவனின் மறு வருகை. இறுதியில் அவன் தன் பிரச்சினைகளைத் தீர்க்க முடியாது அவற்றுடன் வாழ்ந்தாக வேண்டும் என்று புரிந்துகொள்ளும் போது வாழ்வில் தீர்மானங்கள் மறுக்கப்படுவதை ஒப்புக்கொள்ள வேண்டுமென உணருகிறான்.

அவனே கூறுவது போல, "எனக்கு நம்பிக்கை இருக்கிறது. இறையருளால் உருவாக்கப்பட்ட வடிவம் நான். அதைப் புரிந்துகொள்ள என்னால் ஆகாது. அதை புரிந்துகொள்வதிலும் எனக்கு இஷ்டமில்லை" என்கிறான். "மகிழ்ச்சியும் துக்கமும் மாறி மாறி வந்து சேரும் இந்த அகன்ற காட்சியை உற்சாகத்துடனும் பேரன்புடனும் எந்தவித எதிர்பார்ப்பும் உந்துதலும் இல்லாமல் ஏற்றுக்கொண்டு இருக்க வேண்டியதுதான்" என்று சொல்கிறான்.

அவன், தான் எவ்வாறு இருக்கிறோமோ அப்படியே இருப்பதை ஏற்றுக்கொள்வதில் மகிழ்ச்சி அடைகிறான் - இப்படி இருந்திருக்கலாமோ, அப்படி இருந்திருக்கலாமோ என்ற தடுமாற்றங்களும் சஞ்சலங்களும் இன்றி. '8 1/2' உறுதிபட நிறுத்திக்காட்டும், நம்பிக்கை தரும் முடிவு இதுதான்.

'ஜூலியட் ஆஃப் தி ஸ்பிரிட்ஸ்' படமும் இதே நீதியை விளக்குவதுதானோ?

ஆம். ஆனால், அது மற்றொரு தளத்தில் இயங்குகிறது. நலிந்த குரலில் சொல்லப்படுகிறது. அதில் யதார்த்தம் மிகவும் கம்மி. ஜூலியட் மனிதமனத் தத்துவத்தில் அடங்கியிருக்கும் கட்டுக்கதைகளைத் தீண்டிப் பார்க்கிறாள். எனவே, அவற்றில் நீதி போதனை புரியும் சாயல்கள் காணப்படுவதைப் பார்க்கிறாள். அவை திருமணம் என்னும் கட்டமைப்பைச் சித்தரிப்பதுடன் தனிமனிதரின் நிலைப்பாட்டையும் எடுத்தோதுகிறது.

இந்தப் படம் ஓர் இத்தாலிய பெண், நவீன சமூகத்தில் அவள் மீது திணிக்கப்படும் மத வாதங்களையும் நீர்த்துப் போன பழங்கதைகளையும் எவ்வாறு எதிர்கொள்கிறாள் என்பது பற்றியது. இந்த மனித மனத் தத்துவத்தின் தவறான தாத்பர்யம் திருமணத்துக்குப் பின் பெண்ணின் வாழ்க்கை சொர்க்கம் என்று அபத்தமாக உளறுகிறது. அவள் வளர்ந்து பெரியவளாகையில் அபத்தத்தை உணருகிறாள். அவளால் அதை எதிர்கொள்ள முடிவதில்லை. புரிந்துகொள்ளவும் முடிவதில்லை. ஆகவே, அவள் நினைவுகளில் அமிழ்ந்திருக்கும் இளம் பருவ வாழ்க்கையையும் புராணங்களில் உபதேசிக்கப்பட்ட எதிர்காலத்தையும் எதிரொலிக்கும் ஓர் உலகில் புகுந்துகொள்கிறாள். அங்கே அவள் எது செய்தாலும் இளம் பருவத்தில் கற்றுக்கொண்டவையே வெளிப்படுகின்றன. எதிர்கால வாழ்க்கை பற்றிய எதிர்பார்ப்புகள் கோரமாய்த் தோன்றுகின்றன. இறுதியில் நிகழ்காலம் என்பது அவளுக்குத் தினமும் தொலைக்காட்சியில் பார்க்கும் வணிகக் காட்சிகள்தான்.




8½ படப்பிடிப்பில்

இவைகளிலிருந்து விடுபட்டு அவள் மீண்டு வருகையில் அவள் காண்பது: அவளை விட்டு விலகிச் செல்லும் அவளது கணவன்!

இது அவளுக்கு எதிர்பாராத தைரியத்தைத் தருகிறது. தான் இதுவரை பயந்து கொண்டிருந்தது நடந்துவிட்டது என்று ஆகிவிடும் போது தன்னால் என்ன சாதிக்க முடியும், தன்னுடைய உண்மையான சக்தி எது என்று உணர்ந்து தைரியத்துடன் வாழ்க்கையைப் பார்க்கிறாள். உதவாக்கரையான தன்னுடைய படிப்பும், முட்டாளாகத் தன்னை அடித்த மதமும் தனக்குள் ஏற்படுத்திய கற்பனை ராட்சதர்களைக் கண்டே இதுவரை தான் அஞ்சியதாக அவள் தெளிவடைகிறாள்.

'ஆவிகள் தேவையானவை, அவற்றுக்கு நன்றி செலுத்துவது அவசியம்' என்று ஜூலியட் நினைக்கிறாள். அப்படி நன்றி தெரிவிப்பதால் இனி அவள் அவைகளைப் பார்த்து பயப்பட வேண்டியதில்லை. அவைகளை வெறுக்க வேண்டியதில்லை. அவைகளும் மனதுக்குகந்த இங்கிதம் நிறைந்தவைகளாக ஆகிவிடுகின்றன.

இதில் மக்களுக்கான தெளிவான செய்தி என்று ஏதாவது இருக்கிறதா?

நாம் எல்லோரும் கற்றுக்கொள்ளும் பாடம் ஒன்று இருக்கிறது: ஜூலியட் கடைசியில் கற்றுக்கொண்ட மாதிரி! திருமணம் என்பது வெற்றிபெற வேண்டும் என்றால் அதை ஒரு ஆரம்பமாகக் கருத வேண்டும்; சந்தோஷம் தரும் முடிவாக அல்ல. திருமண வாழ்வு நின்று நிலை பெற நாம் மெனக்கெட வேண்டும். மனித வாழ்க்கையின் ஆரம்பமும் முடிவும் அல்ல திருமணம் என்பது. அது மரபு சார்ந்த வழக்கம் அல்ல. திருமண பந்தம் என்பது சமூக நீதி என்னும் கோட்பாட்டைக் கேள்விக்குறியதாக ஆக்க வேண்டும். சிந்தாந்தங்களைக் கட்டிக்கொண்டு அழாமல் அவற்றை எப்போதும் பரிசீலனைக்கு உட்படுத்தப்பட வேண்டும்.

எந்த மாதிரி?

திருமணமாவதற்கு முன்பு உடலுறவு; திருமணத்துக்குப் பின் வேறொருவுடன் உறவு. மனிதன் ஒருதார மண உறவுக்கு அடங்கியவனல்லன். திருமணம் மனிதனது இயல்பான உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தும் கொடுங்கோலான அடக்குமுறை. இதற்கு மாறாக ஒரு பெண், தன் உலகை ஒரு தனி மனிதனின் பின்னால் உருவாக்கிக்கொள்கிறாள். ஒரு மனிதனின் மிகப்பெரிய துக்கம் இன்று என்னவென்றால், பலபேருடன் உறவுகொள்ளும் அவனின் தேவைக்கு இன்றைய நாகரிக சமுதாயம் அவனை ஒற்றைப் பிரகிருதியுடன் வாழும்படி முடக்கிப் போடுகிறது. இத்தகைய நிலைமை இல்லாமலிருந்தால் அவன் இன்னும் சுவராஸ்யமான ஒரு பரிணாம வளர்ச்சியை உருவாக்கி இருப்பான்.

நீங்கள் கத்தோலிக்க சர்ச் கற்பிப்பதை நிராகரித்துப் பேசுகிறீர்கள். நீங்கள் கத்தோலிக்கர்தானே?

இத்தாலியில் ஒருவர் பிறப்பினாலும் பூகோள நியதியினாலும் கத்தோலிக்கராய் இருப்பதைத்

தவிர்க்க முடியாது. கடலில் பிறப்பது மீனாகத்தானே இருக்க முடியும்? இத்தாலியில் பிறந்த ஒருவனால் கத்தோலிக்க சூழலில்தான் மூச்சுவிட முடியும். இத்தாலியக் குழந்தை சர்ச்சுக்குப் போவதும் ஐக்கியப்படுத்தப்படுவதும் கத்தோலிக்க இறுதிச் சடங்கைப் பார்ப்பதும் தவிர்க்க முடியாது. தம்மைப் பாமரக்கூட்டம் என்று அழைத்துக்கொள்பவர்களைப் பார்த்தால் எனக்குப் பொறாமையாக இருக்கிறது; எப்படி இது இத்தாலியில் நடக்கிறது என்று எனக்குப் புரிபடாவிட்டாலும்! விரைவில் இத்தாலியில் உள்ள ஒவ்வொருவரும் தாம் கத்தோலிக்கரா அல்லவா என்று முடிவு செய்யத்தான் வேண்டும்.

**நீங்கள் ‘8½’ படத்தில் காண்பித்துள்ள கத்தோலிக்கப் பாதிரியாளர்களின் சித்திரம் மூலம் நீங்கள் கத்தோலிக்கரல்ல என்று பல கிறிஸ்து சமயத்தவரை நினைக்க வைத்திருக்கிறீர்கள், இது சரியா?**

அவர்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். நான் மிகவும் மதப்பற்றுள்ளவன். என் வாழ்வில் எண்ணற்ற புதிர்களின் எல்லைகளை அறிய முடிந்ததில்லை. அதே சமயம் அவற்றை மகிழ்வுடனும் ஆச்சரியத்துடனும் ஏற்றுக்கொள்கிறேன். இது கத்தோலிக்க எதிர்ப்பா அல்லது மத எதிர்ப்பா? கத்தோலிக்க சம்பிரதாயங்களால் பீடிக்கப்பட்ட நம் குழந்தைகளை விடுதலைக்கு இட்டுச்செல்ல வேண்டும். ஏனெனில், அது அவர்களைக் கூண்டுக்குள் அடைத்துவிடும் ஆபத்து இருக்கிறது.

‘8½’ படத்தில் கிடோவின் கத்தோலிக்க ஆசிரியர்கள் உணர்ச்சிகளற்ற பயங்கரமான ஆட்கள். உண்மையான கிறிஸ்துவப் பணி என்பது மக்களின் அறியாமையை அழிப்பது என்று பணியாற்றிய இருபத்தி மூன்றாம் போப் ஜானுக்கும் இந்தப் பயங்கர கத்தோலிக்க ஆசிரியர்களுக்கும் சிறிதும் சம்பந்தமில்லை. ஒரு பொய்யான, தவறுகள் நிரம்பிய கத்தோலிக்கக் கல்வி, குற்ற உணர்வுகளையும் வேஷங்களையும் தாழ்வு மனப்பான்மையையும் உருவாக்குகின்றது. இத்தகைய நிலைமையில் நான் அவற்றைத் தவறு என்று சுட்டிக்காட்டுவதுடன் நில்லாமல் அவற்றை ஒழிக்கும் முயற்சிகளையும் புரிவேன்.

**‘கெட்ட பெண்’, ‘நல்ல பெண்’ என்ற இரட்டை வேட நீதி போதனைகளை வைத்துப் பெண்களை பிரிப்பதும் - இது சர்ச்சுகளின் கைங்கர்யம் - ஒழிக்கப்பட வேண்டியதென்று நினைக்கிறீர்களா?**

நிச்சயமாக. எம்மைப் போன்ற கத்தோலிக்கர்களுக்கு ஒன்று அவள் மென்மையான, ஒழுக்கம் நிரம்பிய, தாய்மையும் தூய்மையும் நிரம்பிய குணசீலியாக இருக்கிறாள். அல்லது வேசியாக, தறி கெட்டுத் திரிபவளாக கொடுமையானவளாகச் சித்தரிக்கப்படுகிறாள். ஒருத்தி டான்டேயின் பீட்ரிஸ் போல வெண்ணிற தேவதையாக நடமாடுகிறாள். இன்னொருத்தி தன் குழந்தையைத் தானே விழுங்கக் காத்திருப்பவள் போல் நிற்கிறாள். இந்த இரு நிலைப்பாடுகளுக்கான தொடர்பைக் கண்டுபிடிக்க இயலாது. ஏனெனில், பெண் என்பது யார்? அவள் ஆணுக்குள் அடங்கிக் கிடப்பவள்.

பெண்ணைப் பற்றிப் பேசுகையில் நம் மனதின் வளர்ச்சியுறாத இருண்ட பிரதேசங்களில் அவளை நாம் எவ்வாறு கண்டிருக்கிறோம் என்று பரிசீலிக்க வேண்டும். ஆரம்ப காலத்தில் மனிதரிடையே ஆண் - பெண் வித்தியாசம் இருக்கவில்லை. அல்லது குறைந்தது பெண்ணைத் தேவதையாகக் கொண்டாடும் நிலை இல்லாமல் இருந்தது. அதன் பிறகுதான் பிளவு உண்டாக்கப்பட்டது. ஏவாள், ஆதாமிடமிருந்து பிரிக்கப்பட்டாள். ஆகவே, ஆணின் பிரச்சினை என்பது பிரிக்கப்பட்ட பெண்ணைத் தேடிக்கண்டு பிடித்துத் தன்னோடு இணைத்துக்கொள்வது என்பதாயிற்று. இது முக்கியமானதற்குக் காரணம் அவன் தேடிய பெண் அவன் எதிர்பார்ப்புகளின் எல்லை. சுயதரிசனத்தைக் காண்பதற்கான கண்ணாடி.

ஆனால், ஒரு ஆண், தனது பெண் என்று கருத்துபவளை விடுதலை செய்யாதவரை அவன் முழுமை அடைந்தவனல்லன். அவன், அவளை அடிமையாக அல்லது தலைக்குப் பின் ஒளிவட்டம் சூழும் சன்னியாசினியாகக் கருதாது, தன்னுடன் முழுமையாக இயைந்து இயங்கும் ஒரு உயிரோட்டமுள்ள பிரகிருதியாக நினைக்க வேண்டும். பாலுறவில் அவளைத் தன்

சிநேகிதியாக அவன் பாவித்து நடந்துகொள்ள வேண்டும்.

**உங்களுடைய ‘பொக்காசியோ 70’ல் அனிதா எக்பெர்க் விளம்பரப் பலகையில் அவரை சிற்றின்பத்தைத் தூண்டும் பெண்ணரசி என்று பிரம்மாண்டமாக சித்தரித்தது, ‘பெண் என்பவள் அவளுக்கான முழு உரு, ஆணின் பாலியல் அடிமை இல்லை’ என்னும் உங்கள் சித்தாந்தத்தை எடுத்துக் காட்டவா?**

ஆம். செக்ஸ் பற்றிய கட்டுக்களில் அடங்கிக் கிடைக்கும் ஆண், அந்தப் பிரும்மாண்டப் பெண் உருவைப் பார்த்து ஏங்கி, தனது வேஷங்களைக் களைந்து, அவளை அடைய வேண்டும் என்கிற வெறி தலையெடுத்து, அவன் தனது கனவுகளில் புரள வேண்டும். இந்த மீமிசைக் கற்பனையில் (Fantasy) அவன் மூழ்குவது தவிர்க்க இயலாது.

**அப்படியென்றால் இன்று பாலுணர்வுச் சுதந்திரத்தைப் பரப்பும் திரைப்படங்கள், பத்திரிகைகள், இரவு விடுதிகள் ஆகியவை ஓர் ஆரோக்கியமான போக்கைக் கடைப்பிடிக்கின்றன என்று நீங்கள் வரவேற்கிறீர்களா? நிர்வாண ஓவியங்களும் கூடப் பரவ ஆரம்பித்துவிட்டன.**

அவை எல்லாம் நல்லதற்கே. தெளிவற்ற புதிர் மூடிய திரைகளைக் கலைத்துவிட்டு, ‘பாலுணர்வு தீங்கு’ என்ற பிரமையை அவை ஒழிக்கின்றன. சிறையிலிருக்கும் ஓர் ஆண், பெண்ணின் அவயவங்களை நினைத்து எப்படித் தடுமாறுகிறான்? விடுதலை பெற்றதும் அவன் நேராகத் தன் சிநேகிதியைத் தேடிச் செல்லுகிறான். அப்போது அவனது மனதில் நிரம்பியிருப்பது இந்தத் தீங்கு என்று கற்பிக்கப்பட்ட பாடங்களே. பெண்ணுடலைத் தீண்டியிராத காலத்தைத் திரும்பப் பெறும் முயற்சியாக அவன் அவளுடன் இன்பம் தேடுகிறான். அவனது ஆசைகள்



தளர்ந்து போகும் சமயம் மறுபடியும் அவன் தன் திரைகளுக்குள் போய் சரணடைந்து விடுகிறான்.

ஒரு நிர்வாணப் பெண் அவளைப் பற்றிய மர்மங்களையும் இழந்துவிடுகிறாள் என்கிறீர்களா?

*பார்வைக்கு இலக்காகும் மர்மங்கள் மட்டும். அவள் நம்மில் பாதி என்ற நிலையில் ஆடைகளை அணிவித்து மூடுவது என்பது யாருக்கும் கிட்டாத சம்பத்தை பூமிக்கு அடியில் ஒளித்து வைப்பதற்குச் சமம்.*

உங்கள் படங்களில் வரும் பெண்கள், மோகம் எழுப்புபவர்களாக, இரையாகிறவர்களாக, வேட்டைக்காரிகளாக, அல்லது துறவியாகத் தோற்றமளிப்பதில் உங்களின் செயலூக்கத்தை இழந்த ஆண் கதாபாத்திரங்களைக் காட்டிலும் உயிரோட்டம் உள்ளவர்களாகக் காணப்படுகிறார்களே, அது ஏன்?

*என் பெண் பாத்திரங்கள் - அனிதா எக்பர்க்கோ, ஸாந்த்ரா மைலோவோ - படைப்பதற்குச் சவாலாய் இருக்கிறார்கள். ஒரு பெண், ஆணை விட கபடம் மிக்கவளாக விலகிச் செல்பவளாக பாலுணர்வைத் தூண்டுபவளாக ஊக்குவிப்பவளாக இருக்கிறாள்.*

'லா டோல்ச்சே விட்டா'வில் வசீகர அழகிக்கான பாத்திரத்திற்கு, திரையுலக வாழ்வின் கடைசிப் படியில் நின்று கொண்டிருந்த, அனிதா எக்பெர்க்கைதேர்தெடுக்கஉங்களைத்தூண்டியது எது?

*நான் மனதில் உருவாக்கிக் கொண்டிருந்த சித்திரத்தை முழுமையாக அவள் நிவர்த்தி செய்தாள். அவ்வளவுதான். அவளுடைய கடந்த காலப் பின்னணி முற்றிலும் தேவையற்றது.*

அதற்கு முன் ஹாலிவுட்டில் பெரிதாக எதுவும் சாதிக்காத அவரை எப்படி அகில உலக செக்ஸ் அவதாரமாக நீங்கள் மாற்றினீர்கள்?

*அவளிடமிருந்த பாலுணர்வைத் தூண்டும் நுண்ணிய சக்தியை என்னால் உணர முடிந்தது. இதில் ஒன்றும் வினோதமாக எதுவும் செய்து விடவில்லை. நான் மற்ற நடிகர்களிடம் வெளிக்கொணர்ந்த திறமையைத்தான் எக்பெர்க் விஷயத்திலும் செய்தேன்.*

அது எப்படி?

*நல்லது. நான் கற்பனை செய்து வைத்திருக்கும் பாத்திரத்துக்கான நபர் - அது தெருவில் திரிபவராக இருந்தாலும் சரி, அல்லது திரையுலகில் அனுபவம் பெற்றவராயிருந்தாலும் சரி - நான் கூறுவது எல்லாம், சகஜமாக சாதாரணமாக இரு, உன்னிடம் உள்ள மனத் தடைகளை உதறி விடு, டெக்னிக்குகளைப் பற்றிக் கவலைப்படாதே என்பதுதான். அவர்கள் தங்கள் இயல்பான நடை உடை பாவனைகளுடன் சிரித்துக்கொண்டும் கோபித்துக்கொண்டும் அழுதுகொண்டும் இருக்கும் சூழலை ஏற்படுத்திக் கொடுப்பேன். அதாவது அவர்களிடம் இயல்பாகப் படிந்திருக்கும் திறமையை வெளிக்கொண்டு வருவதுதான் என் வேலை.*

*ஒவ்வொருவரிடமும்கலைக்கமுடியாதஉள்ளொளி ஒன்று இருக்கிறது. அது ஒவ்வொருவருக்கும் பிரத்தியேகமானது. அபூர்வமானது. போலியில்லாதது. அனிதா எக்பெர்க்கிடமும் ஸாந்த்ரா மைலோவிடமும் அது இருந்தது. சூழ்நிலை சரியாக அமைக்கப்பட்டால் யாரிடமிருந்தும் அவர்களது சந்தோஷ, துக்க,கோப உணர்ச்சிகளை அவர்களின் சொந்த பாணியில் வெளிப்படையாகவும் நேர்மையாகவும் கொண்டு வந்துவிடலாம். ஒரு பாத்திரத்தின் இயல்பை நான் யாரிடமும் திணிப்பதில்லை. அதே மாதிரி அவரது உழைப்பைக் கட்டுப்படுத்துவதில்லை. மாறாக அந்தப் பாத்திரத்துக்கு அவர் மேலும் வலிமை சேர்க்கிறாரா என்று பார்த்துக் கொண்டிருப்பேன். இதனால் என் பாத்திரங்கள் செழுமையாகவும் திருப்தி தருவனவாகவும் அமைந்து விடுவதாக நான் நினைக்கிறேன். அதனால், பார்வையாளர் அந்தப் பாத்திரத்தில் தன்னை இனம் கண்டுகொள்வது நடந்து விடுகிறது.*

பெரும்பாலான நடிகர்கள் ஒரு பாத்திரத்தை ஏற்று நடிக்க பயிற்றுவிக்கப்படுகிறார்கள். அல்லது வேறுயாரோ ஒருபிரபலத்தைப் போல நடிக்குமாறு வலியுறுத்தப்படுகிறார்கள். ஆனால், நீங்கள் நடிகர்களே அவர்களை உருவாக்கிக்கொள்ள வேண்டும் என்கிறீர்களே?

*அப்படியில்லை. ஒருமுறை தன்னையே அலசிப் பார்க்கும் பயிற்சி ஒருவருக்கு இருந்தால், வெளியுலக உதவி அவருக்குத் தேவைப்படுவதில்லை. இந்த சுயபரிசோதனை அவரது நடிப்பைச்*

செம்மைப்படுத்துகிறது. முக்கால்வாசி நேரம் ஒரு நடிகரின் சொந்தக் குணம் அவர் செய்யும் பாத்திரத்துக்கு ஓரளவுதான் ஒத்துப்போகும். அப்போது நான் அவரிடம் பாத்திரத்தின் முன் இயல்பாக இருப்பதைக் குறைத்துக்கொள்ளச் சொல்கிறேன். ஒரு சமயம் நடிகரிடம் பாத்திரத்தின் குணத்தோடு முழுக்க முழுக்க அவரின் குணம் ஒத்துப்போனால் கூட அவரிடம் இயல்பாக இருப்பது பற்றி பேசுகிறேன். முழுக்க முழுக்கத் தன்னையே பாத்திரத்தில் பிரதிபலிப்பதும் ஆபத்தாகவும் சில சமயம் அதிகப் பிரசங்கித்தனமாகவும் ஆகிவிடும் வாய்ப்பு இருக்கிறது. அப்போது பாத்திரத்தின் உருவாக்கத்தைப் படிப்படியாக நிலைநாட்டும் விதத்தில் நடிக்குமாறு கூறுகிறேன். அவருடைய ஆழ்மனதின் நடமாட்டமும் எதிர்வினையும் அவர் பாத்திரத்துடன் ஒன்றிவிட, நடிகராக அவருடைய தனித்துவம் ஒரு வியக்கத்தக்க சாதனையை ச் சுட்டிக்காட்டும். பிரசவ வலிக்கு நிகராக அவர் நடிப்பை வெளிக்கொணரும் போது அவருடைய ஆற்றலும், சினிமாவின் தொழில்நுட்பமும் ஒன்றுக்குள் ஒன்று கரைந்து ஆழ்ந்த பரவச நிலையை உருவாக்கும். ‘8 ½’ படத்தில் கதாநாயகன் கிடோவாகத் தன்னைப் பாவித்து ஒன்றி நடித்த மார்சலோ மாஸ்ட்ரியான்னியின் சிகர நடிப்பு ஓர் உதாரணம்.

**ஆக, அந்தப் படம் மற்றவர்கள் கூறுவதைப் போல உங்கள் ஆன்மிக சுயசரிதமா?**

ஆம். நான் என்னைப் பற்றியும் என் அந்தரங்க ரகசியங்களைப் பற்றியும் ஒரு கதை எழுதினேன். பின்பு என்னை அப்படியே பிரதிபலித்து உள்வாங்கிக்கொண்ட ஒரு மனிதனைக் கண்டேன். அவன் என் கற்பனையின் மறுபிறவி என்று நினைத்தேன். படப்பிடிப்பு அரங்கில் ஒருவித பிடிபடாத சூழல் ஏற்பட்டது போல எனக்குத் தோன்றிற்று. என்னைச் சுற்றி உடலற்ற உருவம் சுழலுவதாக நம்பினேன்.

**உங்களுக்கு மார்சலோவுடன் நெருங்கிய பழக்கமா?**

நாங்கள் படப்பிடிப்புக்கு வெளியே அதிகம் சந்தித்ததில்லை. என்றாலும் எங்களிடையே ஒருவித அன்னியோன்னியம் நிலவியிருந்தது. ஒரு ஆளுயரக் கண்ணாடி, “நீதான்.. இல்லை நீ இல்லை.” என்று சொல்வது போல் மிக விசித்திரமானது. எங்களிருவருக்குமான தோழமையின் அடிப்படை இது. ஆனால், அவர் எளிமையும் திறமையும் மிக்க மனிதர் - துள்ளாட்டம், பாசாங்கு, பேதைமை என்று காட்டுவதில் என் தம்பியைப் போல. அவரது தொழில் திறமையின் உபாசகன் நான். அவர் ஒரு மகத்தான நடிகர்.

**நீங்கள் வேறு நடிகர்களிடம் இத்தனை ஈடுபாட்டுடன் பணி புரிந்திருக்கிறீர்களா?**

இல்லை. ஆனால், எனக்கு எல்லா நடிகர்கள் மீதும் பிரியம் உண்டு. ஏனெனில், அவர்கள் என் கைப்பாவைகள்! அவர்கள் உலகின் மிகச் சிறந்த நடிகர்கள். நான் வெகு மூர்க்கமாக அவர்களை ஆதரிப்பவன்.

**உங்கள் மனைவி ஜூலியட்டா மாசீனா உங்கள் படங்களில் நடித்திருக்கிறார். உங்களது குடும்ப உறவால் அவரை இயக்குவது உங்களுக்கு எளிதாய் இருந்ததா? அல்லது கஷ்டப்படுத்தியதா?**

இரண்டுமே! நாங்கள் வேலை செய்யும் போது அவள் ஒரு லட்சிய நடிகை. பொறுமை, கீழ்ப்படிதல், சாந்தம், தீவிரம் அனைத்தும் கொண்ட நடிகை. கஷ்டப்படுத்துவது அவளல்ல - நான்தான். மற்ற நடிகர்களைக் காட்டிலும் அவளிடம் நான் பொறுமை இழந்தவனாக இருப்பேன். நான் நினைப்பதை அவள் வெளிக்கொணராவிட்டால் நான் எரிச்சலைடைந்து விடுவேன். அவளுடன் சேர்ந்து நான் செய்யும் படத்தில் எனக்கு அவள்தான் முதன்மையான பாத்திரம். மற்றவர்கள் நினைவில் கொஞ்சம் கொஞ்சமாக வந்து சேருவார்கள். ஆனால், அவள்தான் நடுநாயகமாக இருப்பாள். எனவே, அவள் மீது எரிச்சலடையும் போது, “ஜூலியட்டா ! நீதான் முதலில் பிறந்தவள். மற்றவர்கள் எல்லாம் உனக்குப் பிறகுதான். என் மனதில் மற்றவர்களை விட நீதான் வெகுநாள் குடியிருக்கிறாய். நீ ஏன் சரியாகச் செய்யமாட்டேன் என்கிறாய்?” என்று கேட்க வேண்டும் போலிருக்கும்.

**உங்கள் அபிப்பிராயத்தில் அவர் சிறந்த நடிகையா?**

மிகச் சிறந்த நடிகை! அவள் என் மனைவியாக இல்லாமல் இருந்திருந்தால்கூட அவள் நடிப்பின் மீது என் நாட்டம் இருந்திருக்கும். அவளது மிமிக்ரி எனக்கு மிகவும் பிடிக்கும். அவளது உருண்டை முகம், மகிழ்ச்சியையும் துக்கத்தையும் அருமையாக எடுத்துக் காட்டும். அவளுடைய மென்மையும் நுண்மையான பண்பும் என்னை மிகவும் ஆகர்ஷிப்பவை. அவளது ‘பாணி’ என்னால் உருவாக்கப்பட்டது. அவள் மனிதத் தன்மை கொண்ட வித்தியாசமான பெண்.

**மனைவியாக?**

நிறைய இருக்கின்றன. ஆனால், உண்மையைச் சொல்லவேண்டுமென்றால், அது கஷ்டமாக இருந்தாலும் சொல்கிறேன், நாங்கள் வெகுகாலமாகச் சேர்ந்து வாழ்கிறோம். அன்றொரு நாள் ஒரு படப்பிடிப்பில் எங்கள் இருபத்தியொன்றாவது திருமண நாளை கொண்டாடிக் கொண்டிருந்தோம். இருபத்தியொரு வருடங்கள்! ஆனால், இதுவும் அவ்வளவு நீண்ட காலம் இல்லைதான். இன்னும் நாங்கள் தேடிச் செல்ல வேண்டியவை ஏராளமாக உள்ளன. நாம் எதை பற்றி பேசிக் கொண்டிருந்தோம்?

**உங்கள் மனைவி....**

அவள் மென்மையும் பரிவும் அக்கறையும் கொண்ட பெண்மணி. படப்பிடிப்பில் இருக்கும் போது என் காலுறை ஈரமாக இருக்கிறதா என்று விசாரிப்பாள். இந்தப் பெண்கள்தான் எப்படி என்று உங்களுக்குத் தெரியுமே! அவள் என் மனைவி மட்டுமல்ல, என் ஊக்கத்தின் வேர். கடந்து சென்ற வருஷங்களில் அவள் எனக்குக் கிரியா ஊக்கியாக இருந்திருக்கிறாள். அவள் எனது சில உணர்வுகளின், சில மனநிலையின், சில நடத்தைகளின் குறியீடு. எங்கள் வாழ்க்கையுடன்



மனைவி ஜூலியட்டா மாசீனாவுடன்

இணைந்த எங்கள் சந்தோஷம், துக்கம், கண்ணீர், சிரிப்பு - இவைகள்தான் என் படைப்புகள் உருவாகக் காரணம்.

**உங்கள் வேலையில் அவர் எவ்வளவு தூரம் உதவி புரிந்திருக்கிறார்?**

கதிரவனும் மழையும் நிலத்திற்கு போல அவள் என் வாழ்க்கையை அமைத்துத் தருகிறாள். நான் நிலத்தில் பதிக்கும் விதைகள் செடியாகின்றன. அவற்றிலிருந்து எப்போதாவது என் திரைப்படங்கள் என்னும் மலர்கள் உருவாகின்றன.

**உங்கள் உவமையைப் பின்பற்றிக் கேட்க விரும்புகிறோம்: எங்கிருந்து இந்த விதைகள் வருகின்றன?**

எனக்குப் புலப்படுவதில்லை. திடீரென்று எங்கிருந்தோ ஒரு ஐடியா வருகிறது. அதை என்னுடன் எடுத்துச் செல்கிறேன். வாரங்கள், மாதங்கள், வருஷங்கள் கழித்து அது உருவம் பெறுகிறது. அதன் மேல் என் திரைக்கதையை ஆரம்பிக்கிறேன்.

**புகைப்படங்களில் காணப்படும் உருவங்கள் உங்கள் படத் தயாரிப்புக்கு ஓர் ஊக்கியாக இருப்பதால் அவற்றை ஆழ்ந்து கவனிக்கிறேன் என்று ஒரு முறை சொல்லி இருக்கிறீர்கள்?**

அது எனக்கு ஒரு சடங்கு போலப் பழக்கமாகி விட்டது. நான் ஒரு திரைப்படம் எடுக்கும் போது நூற்றுக்கணக்கான தேர்வுக் கூட்டங்களில் ஆயிரக்கணக்கான முகங்களைப் பார்க்கிறேன். இப்புகைப்படங்கள் அனைத்தும் என்னிடம் உள்ளன. என் பாத்திரங்களுக்கான முகங்களைத் தேடும் போது இவற்றை உபயோகிக்கிறேன்.

**ஒரு படம் ஆரம்பிக்கும் போது அதைத் தள்ளிக்கொண்டே போவதாகவும், ஒரு கட்டத்தில் ஆரம்பிக்க வேண்டும் என்ற கட்டாயத்தை உங்கள் மீது திணிக்க வேண்டியிருக்கிறது என்றும் சொல்கிறார்களே?**

உண்மை அதுவல்ல. போகவும் இந்தத் 'தள்ளிப் போடலுக்கு' நான் மட்டுமே காரணம் இல்லை. வெளி விவகாரங்கள் - உதாரணமாக தயாரிப்பாளரைக் கண்டுபிடிப்பது, அல்லது ஒப்புக்கொண்ட ஒரு தயாரிப்பாளர் திடீரென்று உங்கள் மீது நம்பிக்கை இழந்துவிடுவது - இவையெல்லாம் என் அதிகார வரம்புக்கு உட்பட்டதல்ல. ஆனால், தள்ளிப்போடுவது எனக்கும் நன்மை பயக்கிறது. படம் எடுப்பதற்கான சூழல் அமைய நான் மிகவும் மெனக்கெடுகிறேன். நல்ல சூழ்நிலை என்பது என் படைப்புகள் உயிருடன் நடமாட ஆக்சிஜன் கூடாரம் கிடைப்பது போல. கையெழுத்துப் பிரதி, உடைகள், புகைப்படங்கள், ஓரிடத்துக்குப் போய் வருவது, ஒரு பெண்ணைச் சந்திப்பது, தயாரிப்பாளருடன் சண்டை போடுவது, அலுவலகத்தை மாற்றுவது, வீட்டைச் சுற்றி வெட்டியாக நடப்பது என்று எவ்வளவோ ரகளை. ஒரு படம் உருவாகும் போது நான் ஓயாமல் சிந்திக்கிறேன். நான் இயக்கும் படம் நான் ஆரம்பத்தில் கொண்டிருந்த உருவத்திலிருந்து மாறுபடலாம். முதல் இரண்டு மூன்று

வாரங்களிலேயே அது உயிர்பெற்று நடமாடத் துவங்கி விடுகிறது. அதன் பின் நான் அதை இயக்குவதில்லை. மாறாக அது என்னை இயக்குகிறது. என்னை அதன் பக்கம் இழுத்துக்கொள்கிறது.

**நீங்கள் படம் எடுக்க ஆரம்பிக்கும் முன்னேயே உங்கள் கையெழுத்து படிவத்தை விரிவுபடுத்தி வைத்துக்கொள்வதாகவும் போகப்போக காட்சிகளையும் வசனங்களையும் முன்னேற்பாடு எதுவும் இன்றிச் செய்வதாகவும் ஒரு கருத்து உலவுகிறது.**

நான் கலாரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும் தற்கொலை செய்துகொள்ள இதைவிடச் சிறந்த வழி வேறெதுவும் கிடையாது. நான் படப்பிடிப்பு அரங்கிற்கு வரும் போது கையில் ஒரு கையெழுத்துப் பிரதி வைத்திருக்கிறேன். இது நடிகர்களுக்கு உதவும் பொருட்டு என் கையில் இருக்கிறது. தயாரிப்பாளர்களுக்கும் கையில் ஏதோ விஷயம் வைத்திருக்கிறான் என்ற நம்பிக்கையை இது ஊட்டுகிறது. உண்மையில் நான் செய்வது எல்லாம் என் வசமுள்ள யோசனையை, எப்படிப் படம் எடுக்க வேண்டும், நான் எதிர்பார்ப்பதை அப்படம் அளிக்க என்னென்ன முறைகளைக் கையாள வேண்டும் என்பதுதான். அரங்கை அடைந்ததும் காமிரா ஓட ஆரம்பிக்கிறது. எங்காவது மாறுதல்களை புகுத்த வேண்டுமென்றால் அவசியத்துக்கு ஏற்ப நடிப்பை மெருகேற்ற முயலுகிறேன். ஏதோ நான் முதன்முதலில் நினைத்துவிட்டதால் அதைக் கண்மூடித்தனமாக, ஒரு வெறியுடன், ஒரு பரிசுத்த வேதம் என்று பின்பற்றமாட்டேன்.

நீங்கள், "எனக்கு சிவப்பாக, நீலக் கண்களுடன், ரோஜா நிறக் காதுகளுடன், பொன்னிற முடியுடன், ஏழு பவுண்டு மூன்று அவுன்சு எடையுடன், சிறந்த விரல்களுடன் குழந்தை பிறக்க வேண்டும்!" என்று சொல்ல முடியாது. நீங்கள் மணந்துகொண்ட பெண்ணுக்கு பிரசவ சமயத்தில் உதவி புரியலாம். ஆனால், குழந்தை எப்படிப் பிறக்கிறதோ அப்படித்தான் இருக்கும். அது உங்களுக்கு விதிக்கப்பட்டது. குழந்தை பிறக்கும்போது, "அதற்கு நீலக் கண்கள் இல்லை. அது கருப்பைக்குள் போகட்டும்" என்று நீங்கள் கூற முடியாது.

படம் எடுக்க ஐந்து மாதங்களுக்கு முன்பு பத்து பக்க வசனம் எழுதிய போது யார் நடிக்கப் போகிறார்கள் என்று தெரியாது. எந்த மொழியில் படம் எடுக்கப்படும் என்பதுகூட. எங்கே எடுக்கப்படும் என்றும் தெரியாது. அந்தக் காட்சி ஒரு பூங்காவில் நடப்பதாக எழுதியிருப்பீர்கள். ஆனால், வரும் நடிகரும் அவரது முக பாவனையும் பார்க்கில் அந்த வசனத்தைப் பேசச் சரியாக இருக்காது. அல்லது ஒரு நடிகை அணிந்திருக்கும் உடை அவள் வசனத்துக்குப் பொருத்தமாக இல்லாமல் இருக்கும். அதே போல இரு நடிகர்களுக்கு இடையே பேச வேண்டிய வசனத்தின் போது, நீங்கள் க்ளோசப்பில் ஒரு நீரூற்று அல்லது காணக்கிடைக்காத அபூர்வமான ஒரு மரச்சாமானை எடுக்கிறீர்கள். அந்தக் காட்சிக்கும் அவ்விரு நடிகர்கள் பேச வேண்டிய பத்து பக்க வசனத்தை அர்த்தம் இழந்த சப்தமாக்கி விடும். இதனால்தான் நான் முன் முடிவுகளோடு படம் இயக்குவதில்லை என்று கூறுகிறேன். எவ்வித ஆயத்தமின்றி இயங்குவது எனக்கு சுலபமாயிருக்கிறது.

**ஒரு படம் எடுத்து முடிந்ததும் எப்படி உணருகிறீர்கள்? தேங்கிப் போய்விட்டவராக, இயங்கும் சக்தியை இழந்தவராக உணர்ந்திருக்கிறீர்களா?**

என்னவொரு வினோதமான கேள்வி! என்னைப் பொறுத்தவரை ஒரு படம் திடீரென்று முடிந்து விடுவதில்லை. அது ஒரு எதிரொலியை அல்லது அடிச்சுவடை ஏற்படுத்துகிறது. அதில் நான் வாழ்கிறேன். படம் முடிந்தாலும் அது என் கூடவே இருப்பதாக, ஒலிப்பதாக உணருகிறேன். அம்மாதிரி உணர்வு என்னை விட்டு விலகும் போது புதிய சூழ்நிலை என்னை எதிர்கொள்கிறது. ஒரு புதிய வசந்தத்தை சந்திப்பது போல. புதிய படம் - அதன் புதிய நபர்களுடன், வளர்ச்சி பெற வேண்டிய கதையுடன் என்னை வந்தடைகிறது. நான் இதுவரை வெட்டியாகக் காலம் கழித்ததில்லை. நான் இயக்குனராக ஆன முதல் நாளைப்போலவே இன்றைய தினத்தையும் புதிதாகச் சந்திக்கிறேன். நான் சிந்தனையில், தோல்வியால் கையாலாகாத்தனத்தால் பதிக்கப்பட்டவனா? இருக்கலாம். '8 ½' படம் இந்த மாதிரி சிந்தனையைத் தோற்றுவித்தது. ஆனால், நான் காலாவதியாகி விடுவேன் என்று நம்பவில்லை. அப்படி ஏற்பட்டால், நான் பேசுவதை நிறுத்திவிடுவேன். ஆனால், இப்போதும் உற்சாகத்துடனும் படைப்பூக்கத்துடனும் நடமாடி வருகிறேன்.

**நீங்கள், உங்கள் படம் உட்பட யாருடைய படத்தையும் பார்ப்பதில்லை என்பது உண்மையா?**

ஆமாம். உண்மைதான். நான் ஒரு படத்தை முடிக்கும் போது அடுத்த படத்துக்கான உருவம் எழுந்து விடுகிறது. அது ஒரு பொறாமை பிடித்த காமக்கிழத்தி போல. அது போக நான் நிகழ்காலத்தில் வாழ விரும்புகிறேன். கடந்த காலத்தில் அல்ல. மற்றவர்களின் படத்தை எப்போதாவது பார்க்கிறேன். நான் படங்களைப் பார்ப்பதைவிட அவற்றை உருவாக்குவதை மிகவும் விரும்புகிறேன்.

**நீங்கள் நிச்சயம் உங்கள் சமகாலத்தவரின் படங்களைப் பார்த்திருப்பீர்கள்.**

சில அபிப்பிராயங்களை உருவாக்கிக்கொள்ளும் அளவுக்கு சில படங்களைப் பார்த்திருக்கிறேன்.

**குரோசாவாவின் படங்கள்?**

அவருடைய 'செவன் சாமுராய்' மட்டும். அவர் இன்று உயிருடன் இருப்பவர்களில் சினிமா பற்றி முழுமையாக அறிந்த சிறந்த மனிதர். அவர் கதை சொல்லும் விதத்தைப் பார்க்கையில் என் உடன் பிறந்தவரைப் போல எனக்குத் தெரிகிறார்.

**இங்மர் பெர்க்மன் பற்றி?**

அவர் மீதும் அவர் படைப்புகள் மீதும் பெரும் மரியாதை வைத்திருக்கிறேன். அவருடைய எல்லாப் படங்களையும் நான் பார்த்ததில்லை. அவரது தொழிலில் அவர் தலை சிறந்தவர். இரண்டாவதாக



இத்தாலிய கலையின் காலமற்ற சின்னங்கள்: மார்செல்லோ மாஸ்ட்ரோயானி, சோபியா லோரனுடன் ஃபெடெரிகோ ஃபெலினி

அவரது படைப்புகள் புதிர்கள் நிறைந்தவை. முரண்களில் திளைப்பவை. ஆகவே, அவரால் பார்வையாளர்களை அயர வைக்க முடிகிறது. அதனாலேயே மற்றவர்களை பற்றிப் பேசும் அருகதை அவருக்கிருந்தது. மற்றவர்களும் அவற்றை செவிமடுக்கிறார்கள். பழம் பெரும் கலைஞராக அவர் ஓர் அறையில் நடுநாயகமாக அமர்ந்து பார்வையாளர்களுக்கு கதைகள் சொல்லி, பாடல்களை இசைத்து, கிடாரை மீட்டி, கவிதைகளை வாசித்து, எவரையும் கவர வல்லவர். உங்கள் கவனத்தை எளிதாகக் கவரும் மந்திரவாதியைப் போன்றவர். நீங்கள் அவருடைய கருத்துக்களுடன் ஒத்துப் போகாவிட்டாலும் அவர் பேச்சின் வசீகரம் உங்களைக் கட்டிப் போடும். அவர் பேசும் விதமும் உலகைப் பார்க்கும் தீவிரமும் உங்களைக் கவர்ந்திழுக்கும். சினிமாக் கலையை முற்றிலுமாகக் கற்றுணர்ந்த மேதை அவர்.

அன்டோனியானி?

அவரது சீரான நோக்கம், ஆழ்ந்த நேர்மை, சமரசம் செய்துகொள்ளாமை ஆகியவற்றால் நான் கவரப்பட்டவன். அவருடைய ஆரம்ப கால சினிமா வாழ்க்கை இன்னல்கள் நிறைந்தது. அவரது திரைப்படங்கள் பல ஆண்டுகளுக்கு மறுக்கப்பட்டன. சமரசத்துக்கு உடன்படும் வேறொருவர் என்றால் இவ்வளவு துன்பங்களை சந்தித்திருக்க மாட்டார்.

ஆனால், அன்டோனியானி தனது தனித்த பாதையில் தான் நம்புவதைச் செய்து பயணித்தார். அவரைப் பிற்காலத்தில் பெரும் மேதை என்று கொண்டாடினார்கள். இது என் மீது மிகுந்த பாதிப்பை ஏற்படுத்தியது. தான் என்ன சொல்ல வேண்டும் என்பதில் தெளிவாக இருந்த கலைஞன் அவர். அது மிகவும் முக்கியமானது.

ட்ரூஃபால்ட்?

சங்கடமாக இருக்கிறது. அவருடையது எதையும் நான் பார்த்ததில்லை. மன்னிக்கவும்.

டி ஸீகா?

சாதனை மன்னர். அவரது நடிகர்களின் தலைவர். நவயதார்த்த உலகின் பின்புலத்தில் எழுந்து வந்தவர். மிகச்சிறந்த இயக்குனர். சில சமயங்களில் மற்றவர்களால் அடைய முடியாத உயரத்தைத் தொட்டவர். அதற்கு காரணம் அவரது போர்க் காலப் பின்னணி அவருக்குத் தந்த கௌரவம்.

**சில விமரிசகர்கள் உங்களை நவயதார்த்த இயக்குனர்களுடன் ஒப்பிட்டுப் பேசுகிறார்கள். இதை நீங்கள் வரவேற்கிறீர்களா?**

ஆம். அறுபதுக்களின் நவயதார்த்தத்தைச் சேர்ந்தவன்தான் நான். நாற்பதுக்களில் இருந்த ரியலிசத்துக்கு முற்றிலும் வேறுபட்டு நாங்கள் நின்றோம். நாங்கள் பெரும் லட்சியங்களுடன் உள்ளே வந்து காயம்பட்டு நைந்து போயிருந்த சமயம். அப்போது நவயதார்த்தம் திரைப்பட உலகைக் கவ்வி, கட்டுப்பாடுகளுக்குள் சிதைந்து கிடந்த கலைஞர்களை விடுவித்து, அவர்களை உயர்ந்த பீடத்துக்கு இட்டுச் சென்றது. மக்கள் சினிமாவை ஆளுவதைத் தடுத்து நிறுத்தி, சினிமா மக்களை ஆளும் நிலைக்கு மாற்றத்தைக் கொண்டு வந்தது. நவயதார்த்தம் சினிமாவுக்கு சுதந்திரத்தைத் தர முடிந்ததும், சினிமாக் கலைஞர்கள் ஒரு தூரிகை அல்லது பேனாவைப் போல் சினிமா மீடியத்தை உபயோகித்தார்கள்.

**'லா டோல்ச்சே விட்டா' வெளியான பிறகு அமெரிக்காவிலிருந்து வெள்ளம் போல் உங்களுக்குத் திரைப்பட வாய்ப்புகள் வந்து குவிந்தன. ஹாலிவுட்டில் நீங்கள் சுதந்திரமாக நடமாட முடியும் என்று நினைத்தீர்களா?**

முடியாதுதான். இருந்தாலும் முயன்று பார்க்கலாம் என்று தோன்றுகிறது. அமெரிக்கப் பயணத்தின் போது என் கவனத்தைக் கவர்ந்தவற்றைப் பற்றி ஒரு படம் செய்யலாம். நான் எப்படி எடுக்க வேண்டும் என்று சரியாக முடிவெடுத்தாலும், உருவாக்கப்படும் படம் என்னை சங்கடத்துக்கு உள்ளாக்கித் தோல்வியைத் தரும் என்றே நினைக்கிறேன்.

**ஏன்?**

இத்தாலியில் நான் என்ன செய்கிறேன் என்று எனக்குத் தெளிவாகத் தெரியும். என் நடிகர்களை இயக்குவது பற்றி, சூழ்நிலைகளை எப்படி நம்பத் தகுந்த விதத்தில் சித்தரிப்பது என்பது பற்றி, நான் நடிப்பு பற்றிச் சொல்வதைப் புரிந்துகொண்டவர்களுடன் பேசுவது பற்றி எனக்குத் திடமான நம்பிக்கை இருக்கிறது. ஒரு எக்ஸ்ட்ரா நடிகைக்கு, ஒரு வரி கொடுத்து நடிக்கச் சொல்லிக் கற்றுக்கொடுத்த பின், அந்த ஒரு வரி வரும் சில நொடிக் காட்சிக்கு அவள் உண்மைத் தன்மை கொடுத்துவிடுவாள். ஆனால், இதையே ஒரு அறிமுகமற்ற கூட்டத்துடன், முன்பின் தெரியாத நாட்டில் எப்படி நிர்வகிப்பது? உதாரணமாக ஒரு பாஸ்டன் கார் டிரைவர் ஞாயிற்றுக்கிழமை மதியம் என்ன மாதிரி உடையணிந்து இருப்பான் என்றோ, ப்ராங்கில் உள்ள ஒரு மருந்துக் கடை கேஷியர் தன்னைத் திட்டும் ஒரு பெண் கஸ்டமரைப் பார்த்து எப்படிப் புன்னகை செய்து சமாளிப்பான் என்றோ, எனக்குத் தெரியாதே! தினத்துக்கு ஆயிரம் முறை நான் தவறுகள் செய்து என்னையே மாய்த்துக்கொள்ள வேண்டியிருக்கும். ஏனென்றால், திரைப்படவியல் ஒருவரின் திறமையின் உச்சத்தின் வெளிப்பாடு. எல்லாவற்றின் மீதும் எல்லோர் மீதும் கட்டுப்பாடு வைத்திருக்க வேண்டும்.

கதாநாயகியின் உள்ளாடை, கதாநாயகனின் மீசை, மேஜையின் இடது பக்கம் மட்டுமே வைக்கப்பட வேண்டிய தீப்பெட்டி என்று எல்லாவற்றின் மீதும் தீவிரக் கவனம் இருக்க வேண்டும். அமெரிக்காவில் இது எனக்குப் பெரும் தடைக்கல். இதனால்தான் ஒரு படைப்பாளி அவனது தாய்மொழி, கலாச்சாரம், அவனது சமூக மற்றும் நாட்டுப் பழக்க வழக்கங்கள் இவற்றில் ஊறியவனாக இருக்க வேண்டும். அதனால்தான் முற்றிலும் வேறுபட்ட அமெரிக்கா அல்லது இன்னொரு நாட்டில் கால்பதிக்க என்னால் முடியாது போலிருக்கிறது.

**ஒருவேளை உங்களுக்கான சரியான விலை கிடைத்தால்?**

பணத்தில் எனக்கு நாட்டமில்லை. பணம் கிடைத்தால் நல்லதுதான். ஆனால், அதன் மீது வெறிகொள்ள வேண்டியதில்லை. நான் ரோமுக்கு வரும் போது எனக்குப் பதினெட்டு வயது. ஒரு பத்திரிகையில் வேலைக்குச் சேர்ந்தேன். மதிய உணவுக்கான பணம் என்னிடம் இருந்ததில்லை. எனக்கு உணவுதான் - பணமல்ல - முக்கியமானதாக இருந்தது. என்னிடம் பணமிருப்பதில்லை எப்போதுமே. காப்பி குடிக்கக்கூட நண்பர்களிடம்தான் கடன். பணம் தன்னை விரும்பாதவர்களிடம்தான் தன்னை ஒப்படைத்துக் கொள்கிறது. ஓரளவு என்னிடமும் இப்போது பணம் வரத் தொடங்கி இருக்கிறது!

**உங்களுக்கான புகழும்கூட. இதிலும் நீங்கள் பற்றற்றவர்தானா?**

தவிர்க்க முடியாத போது வேறு வழி யில்லை. ஆனால், புகழ் ஒருவனின் நேரத்தையும் அந்தரங்கத்தையும் கபளீகரம் செய்ய முயலுகிறது. நான் ஓரளவு விளம்பர வேதாளங்களைத் தவிர்த்தாலும் '8 ½' படத்துக்குப் பின் மேலும் மேலும் என் அந்தரங்க உலகை ஊடுருபவர்கள் அதிகமாகிவிட்டனர். நான் அமெரிக்காவுக்குச் சென்ற போது ஓர் இளம் பெண் மகிழ்ச்சிக்கான திறவுகோல் என்னிடம் இருப்பதாகக் கூறினாள்; என்னிடம் ஏதோ சமையல் குறிப்பு இருப்பதை போல. அவர்கள் எனக்குப் போன் செய்த வண்ணமாக இருந்தார்கள். ஓட்டல் தாழ்வாரங்களில் காத்துக் கிடந்தார்கள். என்னிடம் அவர்கள் எதிர்பார்க்கும் தாயத்துகள், விடைகள், அமுதம் எதுவும் இல்லையென்றேன். ஆனால், அவர்கள் நம்பவில்லை. நான் ஒரு இயக்குனர். துறவியோ மனநல மருத்துவரோ இல்லை. நான் என்ன செய்ய வேண்டுமோ அதை என் வேலையில் காட்டுகிறேன்.

**முன்பொரு தடவை பேசுகையில் நீங்கள் உங்கள் பழைய வாழ்க்கையில் இருந்து தப்பிக்க விரும்புவதாகச் சொன்னீர்கள். இதில் வெற்றி கிடைத்ததா?**

ஓரளவு. எனது இளமைப் பருவக் கல்வி பற்றிய குற்ற மனப்பான்மை ஓரளவு குறைந்துவிட்டது.

**செக்ஸ்?**

அல்லது நீதி போதனைகளைக் களைந்து உணர்ச்சிகளைப் புத்திசாலித்தனமாகக் கையாளுவது! இதில் நான் என்னைத் தற்காத்துக்கொள்ள வேண்டியதில்லை. குற்ற உணர்வுகள் எதுவும் இல்லாமல் புத்துணர்வுடன் இருக்கிறேன். ஆனால், முதிர்ச்சியாக நான் நடமாட வேண்டிய காலம் வந்துவிட்டது இல்லையா? என் வயதுக்கு ஒருவன் முதிர்ச்சிபெற்றவனாக நடமாட வேண்டியது அவசியம். ஆனால், இந்தப் புரிதல் உணர்வும் திடீரென்று



ஒரு உணர்ச்சிப் பெருக்கில் நிலை குலைந்துவிடும் சாத்தியமும் இருக்கிறது.

ஒரு பெண்ணுடன்?

எனக்குத் தெரியாது, யாருடன் அல்லது எதனுடன் என்று. ஆனால், வாழ்வில் இதெல்லாம் நடக்கும் சாத்தியம் நிச்சயம் இருக்கிறது.

உங்களைப் பற்றிய நிச்சயம் உங்களுக்கு இருக்கிறதா?

நான் தற்பெருமையாக இதைச் சொல்லவில்லை. உணர்ச்சி வசப்படுவதைக் குறைத்துக் கொண்டு விட்டேன். முன்பை விட அமைதியாக இருக்கிறேன். இளமையில் இருந்த வேகத்தையும் திறனையும் ஓரளவு இழந்துவிட்டேன். ஆனால், நம்பத்தகுந்த ஒரு மத இணக்கம் - என் உடன் பிறந்தது - என்னுள் இருக்கிறது. நான் அதிர்ஷ்டம் நிரம்பிய வாழ்வைப் பெற்றவன். அதனால், அதிக வலியையோ துக்கத்தையோ என் வாழ்வில் உணரவில்லை.

வயதாகிக் கொண்டிருப்பது பயத்தை அதிகரிக்கிறதா?

இல்லை.

சாவைப் பற்றி?

சாவு என்பது ஒரு வினோதமான நினைப்பு. அதைப் பற்றி நினைப்பதை விட பேசுவது கஷ்டமானது. நமக்கு உண்மையில் சாவு என்றால் என்னவென்று தெரியாது. ஆனால், அதை பற்றிய தெளிவற்ற பயம் நம்மை எப்போதும் கவ்வுகிறது. மரணம் ஒரு தொன்மையான கண்டம். அந்தத் தொலைவிலிருக்கும் இடத்தைப் பற்றி பலரும் பேசிக் கேட்டிருக்கிறோம். சிலர் சொல்கிறார்கள் அங்கு நிலம் இருக்கிறது என்று. பலர் இல்லை என்கிறார்கள். சிலர் அதை மிகவும் அழகான இடம் என்கிறார்கள். பலர் அதைத் தூஷிக்கிறார்கள். சிலர் அது இவ்வுலகைக் காட்டிலும் சிறந்தது என்கிறார்கள். மற்றவர்கள் வாழ்வதைவிடச் சிறந்தது வேறு என்ன இருக்கிறது என்கிறார்கள். சாவு மௌனம் பொதிந்தது. நாம் கடைசியாகப் போய்ச் சேர வேண்டிய இடம் அதுதான்.

அது உங்களை அச்சுறுத்துகிறதா?

ஆமாம். இல்லை. வாழ்க்கையைப் போல் சாவையும் ஒருவன் நேசித்து ஆர்வத்துடன் அரவணைத்துக் கொள்ள வேண்டும். பயத்துடன் அல்ல. இரண்டையுமே ஒரு நம்பிக்கையுடன் நெருங்கக் கூடாது. நம்பிக்கை எப்போதும் நாணயத்தின் மற்றொரு பக்கமான பயத்தை போற்றிப்பாடும். பற்றுதான் நமக்கு வேண்டும். நம்பிக்கை அல்ல. 'எல்லாமே புனிதமானவை, அவசியமானவை, பயன்படுபவை, எல்லாமே நன்றாக நடக்கும்' என்ற எண்ணம் உங்களுக்கு இருக்க வேண்டும்.

"வாழ்க்கை மலட்டுத்தனமும் வறட்சியும் நிரம்பியது; நாமெல்லாம் தனித்திருப்பவர்கள்; ஒடுக்கப்பட்டவர்கள்" என்று ஒரு கலைஞன் நினைத்தால் அவனை நான் புரிந்துகொள்ள சாத்தியமில்லை. எல்லாவற்றையும் இவ்விதம் மறுதலிக்கும் அவன் எதற்காகக் கலையை உருவாக்கப் பிரயத்தனப்பட வேண்டும்?

அப்படியென்றால் ஆர்வமும் பற்றும்தான் மகிழ்ச்சியான வாழ்க்கையைத் தரும் அருமருந்துகள் என்கிறீர்களா?

'ஒரு முழு வாழ்க்கையை' என்று வைத்துக் கொள்ளுங்கள். மகிழ்ச்சி என்பது ஒரு தற்காலிக நிலை. துக்கத்துக்கு முன் வருவது. ஆனால், நம் அதிர்ஷ்டம் இன்று எதிர்மாறாக நடக்கிறது. ஒரு விதத்தில் இது எல்லாமே களியாட்டம் நிரம்பிய திருவிழாதானே? ●

**ஸிந்துஜா <weenvy@gmail. com>**

# எஸ்.பொ.வின் 'சடங்கு'

டிசே தமிழன்

எஸ். பொ. எனப்படுகின்ற எஸ்.பொ.ன்னுத்துரையின் புனைவுகளில் பரவலாக வாசிக்கப்பட்ட நாவலாக 'சடங்கே' இருக்கக்கூடும். 1966இல் 'சுதந்திரன்' பத்திரிகையில் தொடராக வந்து, பின்னர் சுதந்திரனால் நூலாகவும் வெளியிடப்பட்டிருக்கின்றது. அன்றையகாலத்தில் ஒரு வருடத்துக்குள்ளேயே 'சடங்கு', 2000 பிரதிகள் விற்கப்பட்டதாகவும் சொல்லப்படுகின்றது. இந்தியாவில் 'ராணி' வாராந்திரி வெளியீடு சடங்கை 80களின் தொடக்கத்தில் மலிவு விற்பனையில் பல்லாயிரக்கணக்கில் அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றது. இந்தவகையில் இலங்கையில் மட்டுமில்லை, இந்தியாவிலும் 'சடங்கு' பெருமளவு வாசகர்களால் வாசிக்கப்பட்டிருக்கின்றதுஎன்பதை அறியமுடிகின்றது.

சடங்கை எஸ்.பொ. எழுதத் தொடங்கியது தற்செயலான நிகழ்வு. கொழும்பில் 1966இல் நடந்த ஒரு இலக்கிய நிகழ்வில், எஸ்.பொ. அவரது நற்போக்கு இலக்கிய அறிக்கையை வாசித்துவிட்டு வெளியே வந்து நிற்கின்றார். அப்போது "சுதந்திரன்" பத்திரிகையில் இணையாசிரியராக இருப்பவர் 'தமிழரசுக் கட்சி' சார்பாக வெளிவந்து கொண்டிருந்த சுதந்திரனில் எழுதக் கேட்கின்றார். எஸ்.பொ.வோ, "உங்களுடைய கட்சி அரசியலை ஏற்றுக்கொள்ளாதவன் நான். கிழக்கிலங்கையில் உங்களுடைய கட்சியின் Enemy Number One என்று கருதப்படுபவன்" என்று அந்த அழைப்பை மறுக்கின்றார். சுதந்திரனின் இணையாசிரியரோ, "கட்சி அரசியலுக்கு அப்பால், நீங்கள் இலக்கியத்தின்பால் கொண்ட அக்கறை எமக்குப் பிடித்தமானது. தரமான இலக்கியத்தை வாசகர்களுக்கு நாங்களும் கொடுக்கவேண்டும்" என்று விடாது கேட்டுக்கொண்டதால் எஸ்.பொ., 'சுதந்திரன்' பத்திரிகையில் தொடராக எழுதத் தொடங்கியதே சடங்காகும்.



சடங்கில் கொழும்பில் வேலை செய்யும் செந்தில்நாதன், யாழ்ப்பாணத்துக்கு சனிக்கிழமை யாழ்தேவியில் போய், புதன்கிழமை திரும்பவும் கொழும்புக்கு வரும்வரை நடக்கும் சம்பவங்களே கதையாகின்றது. நாவலின் சரடாக பாலியல் இச்சை இருந்தாலும்,எஸ்.பொ. அதனூடாகயாழ்ப்பாணத்தின் கிடுகுவேலிக் கலாசாரத்தையும், அசலான யாழ்ப்பாணியின் முகத்தையும் செந்தில்நாதனூடாகக் கொண்டுவருகின்றார்.

யாழ்ப்பாணிகள் சொத்துச் சேகரிப்பதில் ஆர்வமுள்ளவர்களாக, கலாசாரத்தைக் காக்கின்றோம் என்று சொல்லியபடி சாதியில் இறுக்கமுடையவர்களாக, வெளியிடங்களுக்கு அவ்வளவு பயணஞ்செய்யாமலே எல்லாந் தெரிந்ததுமாதிரி உலக ஞானம் பேசுகின்றவர்களாக இருப்பதைச் சடங்கில் நாம் பார்க்கின்றோம். இவ்வாறு இருப்பது மட்டுமில்லை, இவ்வாறாக வாழ்வதுதான் பெருமைக்குரிய விடயமாகவும் நினைக்கின்ற யாழ்ப்பாணிகள் அன்று மட்டுமில்லை, 'சடங்கு' எழுதப்பட்டு 50 வருடங்களான பின், இன்றுங்கூட அவ்வளவு மாறாமலே இருப்பதை நாம் அவதானிக்க முடியும்.

வெள்ளிக்கிழமை லோன் ஒன்று செந்தில் வேலுக்குக் கிடைத்துவிட, அதைப் பணமாக்கியபின், லோன் கிடைக்க வழிசெய்த நண்பரோடு சேர்ந்து ஒரு ஹொட்டலில் கொஞ்சம் 'பாவித்துவிட்டு', இப்படியே ரூமுக்குள் போனால் மற்ற நண்பர்கள் தன்னைக் குடிகாரன் என்று நினைத்துவிடுவார்கள் என, 'வளர்ந்தோர்க்கு மட்டுமான' படத்தை சவோயில் பார்த்துவிட்டு அறைக்குத்திரும்புகின்றார். தான் குடிக்கவும் வேண்டும், ஆனால், பிறருக்குத் தெரிந்தால் மதிப்பிழந்துபோய் விடுமென்றும் நினைக்கின்ற செந்தில்நாதனை தொடக்கத்தில் விவரிக்கும்போதே நமக்கு எஸ்.பொ. ஒரு அசலான யாழ்ப்பாணியை அறிமுகப்படுத்தி விடுகின்றார்.

மாகோவில் ரெயினில் ஏறும், மட்டக்களப்பில் இருந்து வரும் ஒரு பெண்ணோடு செந்தில்நாதன் பேச்சுக் கொடுக்கின்றார். அந்தப் பெண் மட்டக்களப்பைச் சேர்ந்தவர். அவரை மணம்புரிந்த ஆணோ யாழ்ப்பாணத்தவர். இதை அறிந்தவுடன் செந்தில்நாதன், அந்த ஆணைப் பற்றி, 'சரிதான். கூழ்ப்பானைக்கே போய் விழுந்த ஞாயந்தான். அவன் குடிவெறியிலைதான் இவளிலை மாட்டியிருப்பான்' என்று வழக்கமான யாழ்ப்பாணிகளைப் போல நினைத்துக்கொள்கின்றார். இப்படி அறிமுகமற்ற பெண்ணோடு அவர் ரெயினில் பேச்சுக் கொடுத்தாலும், அவர் தன் மனைவி அன்னலட்சுமி எந்த ஆடவனுடனும் பேசுவதை விரும்புவதில்லை.

செந்தில்நாதன் ஒருமுறை அன்னலட்சுமி இப்படியான ரெயின் பயணத்தில், யாரோ அந்நியன் கேட்ட கேள்விக்குத் தன்னை முந்திப் பதில் கொடுத்ததால், அன்னலட்சுமியோடு கிட்டத்தட்ட 2 நாள்கள் பேசாத கனவானும் ஆவார். 'இனி ஒருநாளும் இந்தப் பிழையைச் செய்யமாட்டேன்' என்று அன்னலட்சுமி பல மன்றாட்டங்களைச் சமர்ப்பித்து, கண்ணீர் சிந்திக் கறையைக் கழுவியபின்னர்தான், செந்தில்நாதன் மன்னிப்பை அருளியுமிருக்கின்றார்.

செந்தில்நாதன், அவரது மனைவி அன்னலட்சுமி, அன்னலட்சுமியின் தாயார் செல்லப்பாக்கிய ஆச்சி,

அவர்களின் ஐந்து பிள்ளைகள் உள்ளடக்கியதுதான் செந்தில்நாதனின் உலகம். இந்த நாவலில் பாலியல் விழைவு ஒரு முக்கிய கண்ணி என்றாலும், எஸ்.பொ. கூறும் பாலியல் இச்சை புதிய தம்பதிகளுக்கு வரும் பாலியல் ஆசை அல்ல. ஐந்து பிள்ளைகளுக்கும் பின்னாலும் இன்னமும் பெருகிக்கொண்டிருக்கும் பாலியல் விருப்பைத்தான் எஸ்.பொ. அவ்வளவு நுட்பமாக வாசிக்கும் நமக்குக் காட்டுகின்றார். நம் தமிழ் சமூகத்தில் பாலியல் இச்சை என்பதே பிள்ளைகள் பெற்றவுடன் எல்லாத் தூண்டல் துலங்கல்களும் முற்றுப்பெற்றது போன்ற உணர்வுடன் இணைகளுக்கு இடையில் இருக்கையில், எஸ்.பொ., ஐந்து பிள்ளைகளைப் பெற்றபின்னமும் வற்றாத காமம் மீதான விருப்பைக் காட்டுவதுதான் இங்கு அழகானது.

சடங்கில் எஸ்.பொ., ஐந்து பிள்ளைகளைப் பெற்ற ஒரு தம்பதியை முக்கிய பாத்திரங்களாக கொண்டு எழுதியதோடல்லாது, அவர்களுக்கு இன்னும் பெருகிக்கொண்டிருக்கும் அன்பையும், அந்த அன்புக்காகசெய்கின்றசிலவிட்டுக்கொடுப்புக்களையும் கதையின் போக்கில் சொல்லிப்போவதால் இன்றும் சடங்கை வாசிக்கச் சுவாரசியமாக இருக்கின்றது.

செல்லப்பாக்கிய ஆச்சிக்கும், மருமகன் செந்தில்நாதனுக்கும் இருக்கும் உறவு அசல் யாழ்ப்பாணிய உறவுதான். மருமகனிடம் எதையும் செல்லப்பாக்கிய ஆச்சி நேரடியாகச் சொல்வதில்லை. மகளுக்குச் சொல்வதுபோலவே, அவருக்குக் கட்டளைகள் இடப்படுகின்றன. சிலவேளை அன்னலட்சுமி அதை செந்தில்வேலுக்கு இன்னொருமுறை சொல்லிக் கடத்துகின்றார். சிலவற்றை அவரே நேரடியாகக் கேட்டு ஒன்றுமே மறுத்துப் பேசாது மாமியின் கட்டளைகளுக்குக் கட்டுப்படுகின்றார்.

மனைவி மீதான காதல், மாமி மீது மரியாதை போன்றவை யாழ்ப்பாணிகளுக்கும் இருக்கின்றதென்று காட்டும் அதே எஸ்.பொ.தான் யாழ்ப்பாணிகளின் அசல் முகத்தைக் காட்டவும் பின்னிற்கவில்லை. யாழ்ப்பாண ஆதிக்க சாதியில் பிறந்த செந்தில்நாதனின் வார்த்தைகளில் பள்ளன், பறையன், நளவன் என்பவை சாதாரணமாகத் திட்டும்போதெல்லாம் வந்துவிடுகின்றது. அதுமட்டுமின்றி அவர்களுக்கு வேலியடைக்கும் மாணிக்கத்துக்கு கோப்பி கொடுக்கும்போது சிரட்டையில் கோப்பி கொடுக்கும் யாழ்ப்பாணிகளின் ‘தனித்துவம்‘ காட்டப்படுகின்றது. அப்படியே இதை விட்டுவிட்டுப் போயிருந்தால் என் ஆசானாக எஸ்.பொ.வை ஏற்றுக்கொள்ளத் தயங்கியிருப்பேன். ஆனால், மாணிக்கம் எனது உடலுக்குக் கோப்பி கேடு என்று மறுக்கின்றார். கிளாஸில் கோப்பி குடித்தபடி இதைப் பார்க்கும் செந்தில்நாதன், மாணிக்கத்துக்கு உடல்நலப் பிரச்சினையல்ல, சிரட்டையில் கொடுப்பதுதான் பிரச்சினை என்று விளங்கிக்கொள்கின்றார்.

கொழும்பில் இருந்து வெளியுலகைப் பார்த்த செந்தில்நாதன் இதில் குறுக்கிடுவார் என்றுதானே நினைக்கின்றோம். இல்லை. செந்தில்நாதன் அசல் யாழ்ப்பாணியேதான். அவர், ‘கொழும்பில்தான் எந்த வேறுபாடுகளும் இல்லாது ஒரே மேசையில் சாப்பிடும் இந்தச் சாதிகள் இங்கேயாவது இப்படியிருக்கட்டும்‘ என்று தானொரு அசலான சாதிமானை என்பதை நிரூபிக்கின்றார். அங்கு நிற்பதுதான் எஸ்.பொ.

எஸ்.பொ. ஆளுமை விகசிக்கின்ற இன்னொரு இடம். வாசிகசாலையில் பத்திரிகைகளை வாசித்தபடி பலதும் பத்துமாக செந்தில்நாதன் ஊர்க்காரர்களிடம் பேசிக் கொண்டிருக்கின்ற இடம். அப்போது எஸ்.பொ. சடங்கை பத்திரிகையில் எழுதுகின்றார் என்று ஒரு பேச்சு வருகின்றது. அப்போதும் செந்தில்நாதனுடைய யாழ்ப்பாண மூளையை எஸ்.பொ. அழகாகச் சொல்லிவிடுகின்றார்.

செந்தில்நாதன் எந்தக் கதைகளையும் வாசிப்பதில்லை. ‘உதுகள் மினக்கெட்ட வேலையள்’ என்பது அவருக்குத் தெரியும். ஆனால், அதேசமயம் மற்றவர்கள் கதைப்பதை வைத்து - பிறர் சிந்திய கருத்துக்களைக் கேள்வி ஞானமாக வைத்து - எல்லாந் தெரிந்தமாதிரியாகப் பேசிவிடுவார். இப்போதுகூட இந்த சமூகவலைத்தளங்களில் நாம் நிறைய செந்தில்நாதன்களை இப்படிப் பார்த்துக்கொண்டிருக்கின்றோம் அல்லவா?

எஸ்.பொ. ‘சடங்கு’ கதையை தொடராக எழுதுகின்றார் என அதை வாசிக்கும் ஒருவர் சொல்லும்போது செந்தில்நாதன் என்ன சொல்கின்றாரெனப் பாருங்கள்: “உந்தப் பொன்னுத்துரை ஆர் தெரியுமோ? உந்தச் சாதியளும் இப்ப எழுத்தாளங்கள் எண்டு சொல்லிக்கொண்டு திரியிறாங்கள். ஒருநாள்தான் ஆளைக் கண்டிருக்கிறன். அதுகும் றெயிலுக்கை. தலை கெட்ட வெறி. சத்தியும் எடுத்துப் போட்டு பேப்பரை விரிச்சுக்கொண்டு ஒரு மூலையில் சுருண்டு கிடந்தான். உவங்கள் முதலிலை தங்களைத்தாங்கள் திருத்தவேண்டும். குடிச்சு வெறிச்சுத் திரியிற உவங்கள் ஊரைத் திருத்த எழுதினமோ?” என்கின்றார்.

இப்போது வாசிக்கும் நமக்கும், தொடக்கக் காட்சியில் மட்டக்களப்புப் பெண்ணொடு ஏறும், காலையிலே பார் பக்கம் ஒதுங்கிய அந்த ஆணும் எஸ்.பொ.தான் என்று விளங்கின்றது. ரெயினில் அந்தப் பெண்ணிடம், “உங்கள் கணவன் சரியாகக் குடிக்கின்றார் போல அவரின் கண்களைப் பார்க்கும்போதே தெரிகிறது” என செந்தில்நாதன் சொல்லும்போது, “எனக்கும் அந்தக் கவலை இருக்கிறது” என்றுதான் அந்தப் பெண் முதலில் கூறுகின்றார். பின்னர் தொடர்ந்து செந்தில்நாதன், யாழ்ப்பாணத்துக்காரனை ‘மடக்கிய’ மட்டக்களப்புக்காரி என்ற எரிச்சலில் அவரின் குடிகாரக் கணவனைப் பற்றிப் பேசும்போது, அந்த பெண் எனது கணவர் சாதாரணமானவர் அல்ல, அவர் Trained Graduate என்று சொல்லி கணவரை விட்டுக்கொடுக்காது செந்தில்வேலின் வாயை அடைத்தும் விடுகின்றார்.

எஸ்.பொ. தன்னைப் பற்றிய பாத்திரத்தையும் சடங்கில் நுழைப்பதன் மூலம், அவர் செந்தில்நாதனிடமிருந்து தன்னை விலத்திக்கொள்வதைப் பார்க்கின்றோம். தன்னையே ‘எளிய சாதியாக’ நினைக்கும் ஒருவரையே, அவர் தனது இந்த நாவலில் முக்கிய பாத்திரமாக்கின்றார். உங்கள் சாதித்திமிர்களுக்கு மேலாய் நான் விகசித்து நிற்பேன் என்று எழுத்தால் எஸ்.பொ. கொள்கின்ற



புகைப்படம்: பாலுமகேந்திரா

பெருமிதம் இது.

நான் 'தீட்டுப்பட்டவன்' என்று என்னை உங்கள் இயல்புவாழ்க்கையில் இருந்து ஒதுக்கினாலும், உங்களைப் பற்றிப் பேசும் எனது இந்தக் கதையை வாசிக்கும்போது உங்கள் சாதிப்பெருமை எங்கே போனது என்று கேட்கின்ற இறுமாப்பு அது. எழுத்தால் சாதியை மீறிப்போகின்றஓர் அற்புதகணம் நிகழ்கின்றதை நாம் சடங்கில் தரிசிக்கின்றோம்.

இன்னொருவகையில் இது சாதியின்பேரில் பெருமைகொள்ளும் எல்லாம் யாழ்ப்பாணிகளும், அவமானங்கொள்கின்ற இடமும்கூட. உங்களைப் பற்றிய அற்புதமான கதையை எழுதக்கூட உங்களால் விலத்தப்பட்ட ஒரு 'எளிய சாதிக்காரனே' வந்து சொல்லவேண்டியிருக்கின்றது என்பதாகும். முதன்முதலாக சடங்கை வாசித்தபோது ஏன் எஸ்.பொ. சடங்கில் தானல்லாத ஆதிக்கச்சாதியை முக்கிய பாத்திரங்களாகக்கொண்டவர் என்றுயோசித்ததுண்டு. ஆனால், இப்போது ஐந்தாறு தடவைகளுக்கு மேலாக சடங்கை வாசித்தபின், எஸ்.பொ. இதை ஒரு நுட்பமாகத்தான் செய்திருக்கின்றார் போலத்தான் இப்போது தோன்றுகின்றது.

ஒடுக்கப்பட்டவர்களின் பார்வையில் நின்று சொன்னால் இந்த ஆதிக்கச்சாதிகள் எதையும் வாசிக்காமல், எளிதில் ஒதுக்கிவிடுவார்கள் என்பதாலேயே, அவர்களையே பாத்திரமாக்கி, கலைத்துவம் இழக்காது அவர்களின் உண்மையான முகத்தை இங்கே தோலுரித்துக் காட்டியிருக்கின்றார் என்றே நான் சொல்வேன்..இப்படி யாழ்ப்பாண ஆதிக்கசாதியின் அசலான பக்கங்களை வெளிப்படுத்தினாலும், தேவையற்ற காழ்ப்புக்களை அவர்கள் மீது எஸ்.பொ. சடங்கில் திணித்தாரல்ல என்பதுதான் முக்கியமானது. ஆகவேதான் 'சடங்கு' பிரச்சாரமில்லாது கலைத்துவமாகவும் ஒரு அரசியல் பிரதியாகவும் தன்னளவில் தனித்து மிளிர்கின்றது.

யாழ்ப்பாணிகள் எப்படி சொத்துக்காய் எதையும் இழப்பார்கள் என்பதை செல்லாப்பாக்கிய ஆச்சி யினூடாகப் பார்க்கின்றோம். ஆச்சியின் காணியைப் பிரிப்பதில் அவரின் மகளான அன்னலட்சுமிக்கும், மகனான நவரத்தினத்துக்கும் சிக்கல் இருக்கின்றது. 'மகன் சொன்னபடி கேட்கின்றான் இல்லை, இனி கோர்ட்டுக்குப் போவதைத் தவிர வேறு வழியில்லை' என்று ஆச்சி முடிவுக்கு வருகின்றார். இறுதி முயற்சியாக செந்தில்நாதனை நவரத்தினத்திடம் சமாதானம் பேச அனுப்புகின்றார்.

செந்தில்நாதனோ, நவரத்தினம் ஊற்றிக்கொடுக்கும் சாராயத்தில் மயங்கி, நவரத்தினம் சொல்கின்ற எல்லாவற்றுக்கும் தலையை ஆட்டிவிட்டு வந்துவிடுகின்றார். இதுவரை மரியாதையாக மருமகனை நடத்தியவர், இப்போது நேரடியாகவே ஒன்றுக்கு உதவாதவர் என்று செந்தில்நாதனையே செல்லப்பாக்கிய ஆச்சி திட்டிவிடுகின்றார். சொத்து என்று வந்தால் யாழ்ப்பாணிகளுக்கு உறவுகள் கூட முக்கியமில்லை. ஆச்சிக்கு தன் மகனை, மருமகனைவிட தன் சொத்தே முக்கியமென எஸ்.பொ. காட்டுகின்ற இந்த இடமும் முக்கியமானது.



ஓவியம்: மருது

பரவலாக பல்வேறு தரப்புக்களால் வாசிக்கப்படுகின்ற சுதந்திரனில்தான் இந்த நாவல் தொடராக வருகின்றது என்றபோதும் எஸ்.பொ. தன் 'எழுத்தின் மீதான சத்தியத்தின்' முன் சமரசம் செய்துகொள்ளாததைப் பார்க்கின்றோம். முதலாவது அத்தியாத்திலேயே செந்தில்நாதன் 'சவோயில்' வயது வந்தோர்க்கான படம் பார்ப்பதிலிருந்து அதில் வரும் அழகிகள் ஆடைகளை அவிழ்த்து கனவில் ஆலிங்கனங்கள் செய்வது வரை விபரிக்கப்படுகின்றது. பிறகு யாழ்ப்பாணத்துக்கு வந்தபின்னும் அந்த அழகிகளின் தனங்களோடு, அன்னலட்சுமியின் தனங்களை ஒப்பிட்டு கிளர்ச்சி அடைவதும் எழுதப்படுகின்றது.

அதுமட்டுமில்லாது நினைத்த தசை வேட்கை நடக்காததால் அன்னலட்சுமி தன் ஆட்காட்டிவிரலை உணர்ச்சி உற்பத்தி பெருக நுழைத்து இன்பம் பெறுவது உட்பட,பெண்களுக்கு வரும் மாதாந்த உதிரப்பெருக்கில் ஏற்படும் உளைச்சல்வரை எந்தத் தயக்கமுமில்லாது எஸ்.பொ. 50 ஆண்டுகளுக்கு முன்னரே எழுதிச் செல்கின்றார்.

'சடங்கில்' பாலியல் இச்சையை மூன்று மாதங்களுக்குப் பிறகு தீர்த்துக்கொள்ள செந்தில்நாதன் ஊருக்கு வந்து அது கடைசிவரை நிகழாமல் போகின்றது என்றுதான் நினைத்துக்கொள்கின்றோம். ஆனால், நுட்பமான வாசகருக்கு இங்கே எஸ்.பொ. காட்டுகின்ற ஒரு நுண்ணிய இடமும் இருக்கின்றது. அது செவ்வாய்க்கிழமை பகல் பொழுது. அன்று பிள்ளைகளும் பாடசாலைக்குப் போய்விட, செல்லப்பாக்கிய ஆச்சியும் சந்தைக்கு எதையோ வாங்கச் சென்றுவிட, ஒரு தனிமை இவர்கள் இருவருக்கும் கிடைப்பதை நாம் அறிகின்றோம். செந்தில்நாதனும் அன்னலட்சுமியும் இவ்வளவு 'தாகத்தோடு' உடல் இணையக் காத்திருக்கின்றபோது இந்தப் பொழுதைப் பாவித்திருக்கலாம். ஆனால், எங்கள் எஸ்.பொ. குறும்புக்காரர். அவர் அந்தச் சின்னச் சந்தோசத்தையும்கூட யாழ்ப்பாணியாகிய செந்தில்நாதனுக்குக் கொடுக்க விரும்பாமல் கடந்துபோய்விடுகின்றார்.

கிடுகுவேலிகளோடும், கந்தபுராணக் கலாசாரத்தோடும் இருக்கும் உங்களுக்கு, நான் தரக்கூடிய சிறியதண்டனையாக இதுவே இருக்குமென்று அந்த செவ்வாய்ப் பகலைக் கூட எஸ்.பொ. இவர்களின் கூடலுக்கு விட்டுக்கொடுத்து விடவில்லை. குடித்துவிட்டு சாத்துவாயோடு இப்படியே தூங்குக என்று எஸ்.பொ. ஒரு மெல்லிய சாபத்தை அந்த செவ்வாயில் போட்டுவிடுகின்றார். கொஞ்சம் சில்மிஷம் செய்து உடலுறவுக்குத் தயாராகும்போது செல்லப்பாக்கிய ஆச்சியை எஸ்,பொ எழுத்தின் உள்ளே கூட்டிக்கொண்டு வந்துவிடுகின்றார் . ஆக, இதுகூட சாதித்திமிருள்ள யாழ்ப்பாணிக்கு ஒரு நுட்பமான தண்டனை என்பது நமக்கு விளங்கிவிடுகின்றது.

'சடங்கு' என்று நாவலுக்குப் பெயர் கொடுத்ததாலோ என்னவோ இறுதியில் ஒரு சாமத்தியச் சடங்கோடு கதையை எஸ்.பொ. முடித்துக்கொள்கின்றார். ஆனால், நமக்கு செந்தில்வேலின் மனம் அவாவியது வேறு ஒரு 'சடங்கை' என்பது விளங்குகின்றது. எந்தச் 'சடங்காயினும்' அது மரபின் தேவையற்ற பல விடயங்களைக் காவிக்கொண்டு வந்திருக்கின்றது. ஒரு சடங்கைப் பற்றிப் பேசிக்கொண்டு யாழ்ப்பாணிகள் காலங்காலமாய்க் காவிக்கொண்டு வந்துகொண்டிருக்கும் பல சடங்குகளை' எஸ்.பொ. பேசுகின்றார்.

'சடங்கு' வெளிவந்து இன்று 50 வருடங்களான பின்னும், மீள வாசித்து புதுப்புதுப் பக்கங்களை கண்டுபிடிக்கக் கூடியதாக இருப்பதுதான் வியப்பளிப்பது. அது அதனுள் பல நுண்ணிய பக்கங்களை ஒளித்துவைத்திருப்பதால்தான் எத்தனை முறை வாசித்தாலும் அலுக்காது இருக்கின்றது. எஸ்.பொ. ஓர் அற்புதமான படைப்பாளியாக முற்றுமுழுதாக விகசித்து ஈழத்துச் சூழலில் ஒரு துருவநட்சத்திரமாகமாறியதென்பது 'சடங்கு' என்கின்ற இந்தப் புதினத்திலேயே நிகழ்ந்திருக்கின்றது என்று சொல்வேன். ●

**"டிசே தமிழன்"** elanko@rogers.com

---

சடங்கு - எஸ். பொன்னுத்துரை; விலை ரூ. 70;
வெளியீடு: மித்ர பப்ளிகேஷன்ஸ்;
மின்னஞ்சல்: mithrabooks@gmail.com

கவிதை

# டி. கண்ணன் கவிதைகள்

ஓவியம்: நடேஷ்





1

போடட்டுமா என்று
கேட்டு விட்டுத்தான் போட்டார்
அந்த இசையை
உள்ளே நுழையத் தடை
பல நதிகளையும் சிறு பாலைவனங்களையும்
சந்தடி மிகுந்த சிறு நகரங்களையும் தாண்டி
அந்த வீடடைந்தேன்
அழைப்பு மணியை அழுத்த
உள்ளிருந்து கதவைத் திறந்தது
நான்தான்
கூச்சமின்றி உள்ளே நுழைந்தேன்
இசை முடிந்து விட்டிருந்தது

2

இன்றைய வெயில்
வேறொரு வெயிலை நினைவு படுத்துகிறது
அந்த வெயில் வெறொரு வெயிலை
மூன்றிலும் காகங்களின் கூச்சல்
சாலையின் எதிர் திசையில் புலரும்
அந்தி
எப்போதும் வேறொரு அந்தியை
நினைவு படுத்த தூண்டியதில்லை

3

முடிவுறா முடிவொன்றில்
அமர்ந்து
'காலத்தின் தேற்றம்' என்ற நூலை
வாசித்துக் கொண்டிருந்தேன்
நகர்ந்து கொண்டிருந்த வண்டி நின்றது
இறங்கியவர்களை கவனித்தேன் இல்லை
ஏறுபவர்களை 'ஒரு நொடி'கண் கொண்டு பார்த்தேன்
மரங்கள் நகரத் தொடங்கின ●

'டி. கண்ணன்'<krishnaswamy164@gmail.com>

சிறுகதை

# அமுதென்றும் நஞ்சென்றும் ஒன்று

தன்ராஜ்     ஓவியம்: சச்சின் அக்லேகர்

*நஞ்சு 1*

ஒவன் டைமர் மணி அடிப்பதற்கு சில வினாடிகளுக்கு முன்னமே லஷ்மி ஒவனை திறந்தாள். ஒவன் க்ளவை மாட்டிக்கொண்டு கேக் டின்னை எடுத்து கிச்சன் வொர்க் டாப் மீது வைத்தாள். வெண்ணை வெட்டும் கத்தியை கேக்கின் நடுவில் விட்டு மெதுவாக எடுத்தாள். மேகமில்லாத முற்காலை வெள்ளி வானம் போல ஒரு பொட்டு கேக்கும் மேலே ஒட்டாமல் பரிசுத்தமாய் வெளியே வந்தது வெண்ணெய்க் கத்தி.

ஒரு நிறைவு புன்னகை லஷ்மியின் முகத்தை இன்னும் சற்று விரியச் செய்தது. ஒரு மணி நேரம் கழித்து க்ரீம் ட்ரெஸ்ஸிங் ஆரம்பித்து விடலாம்.

லஷ்மிக்கு யூகேவில் பிடித்த முதல் விஷயம் சிறிய ப்ளாட்களில்கூட ஒவன் இருந்தது. ஊரில் கேக் செய்ய வேண்டும் என்றால் மைக்வோ வேவ் ஒவந்தான் ஒரே வழி. அதில் செய்த கேக்குகள் லஷ்மிக்கு பிடிப்பதில்லை. பிஸ்கட் போல மொறுமொறுவென்று ஆகிவிடும். இல்லாவிட்டால் ஷ்ரிகண்ட் போல கொழகொழவென்று ஒரு பதத்தில் வரும். சரியான பதம் அதில் லஷ்மிக்கு அமையவே யில்லை.



கிச்சனுக்காகதான் லஷ்மி தனி ப்ளாட்டில் தங்கினாள். பெட் சிட்டிலோ ஷேர்டு அக்காமடேஷனிலோ தங்கினால் தனக்கே தனக்கென்று சமையலறை அமையாது, மற்றவர்களுடன் ஷேர் செய்ய வேண்டும்.

இங்கு வந்து ஆறு மாதம் ஆயிற்று. இந்த ப்ரோஜக்ட் இன்னும் ஒரு ஆறு மாதம் போகும். ஆன் சைட்டில் இந்தியாவில் இருப்பது போல வேலை பளுவெல்லாம் இருப்பதில்லை. ஒரு நாளைக்கு ஏழு மணி நேரம் அலுவலகத்துக்குள் இருந்தால் போதும். இந்தியாவில் எப்போதுமே பனிரெண்டு மணி நேர வேலைக்கு எட்டு மணி நேரம்தான் கிடைக்கும். வேக வேகமாக செய்ய வேண்டும். இங்கு ஏழு மணி நேரத்திற்கு அவர்கள் கொடுப்பதே ஐந்து மணி நேரத்திற்கான வேலைதான். அதையும் லஷ்மி மூன்று மணி நேரத்தில் முடித்து விட்டு ரெசிப்பி சைட்டுகளை மேய்ந்து கொண்டிருப்பாள்.

சமைப்பதும் சாப்பிடுவதும் லஷ்மிக்கு மிக பிடித்த விஷயங்கள். ப்ளஸ் டூ முடித்துவிட்டு ஹாஸ்பிடாலிடி மேனேஜ்மெண்ட் படிக்கிறேன் என்றாள். அப்பா ஒரு முறை முறைத்துவிட்டு எஞ்சினியரிங் சேர்த்துவிட்டார்.

படிப்பது எப்போதுமே லஷ்மிக்கு சிரமமாக இருந்ததில்லை. ஆனால், சமையல் அளவுக்கு வேறு எதுவும் அவளுக்கு பிடிக்கவில்லை.

கேம்பஸில் ப்ளேஸ் ஆகி ஐந்து வருடமாகிறது. அதில் ஒரு வருடம் ஆன்சைட்டிலும் இருந்துவிட்டாள்.

அவள் தோழிகளில் திருமணமாகாதவள் லஷ்மி ஒருத்திதான். காலேஜ் வாசலில் இருந்த சைனீஸ் ரெஸ்டாரெண்ட் சிக்கன் ப்ரைட் ரைஸும் கேண்டின் சமோசாவும் ஈர்த்த அளவுக்கு எந்த பையனும் லஷ்மியை ஈர்க்க வில்லை. அதனால் காதல் எல்லாம் இல்லை. வீட்டில் பார்த்த வரன்கள் எதுவும் அமையவில்லை. எல்லோரும் சொல்வது ஒரே காரணம்தான், பொண்ணு குண்டா இருக்கா.

அம்மா வம்படியாக கலர்ஸில் உடல் குறைக்க சேர்த்துவிட்டாள். அவர்கள் சொன்ன பத்திய சாப்பாடெல்லாம் லஷ்மிக்கு சரிப்பட்டு வரவில்லை. ஆனால், கேக் பீட்டரைப் போன்ற ஒரு வஸ்துவை வைத்து உடலில் கொழுப்பிருக்கும் இடத்தில் எல்லாம் மசாஜ் போல அவர்கள் தேய்ப்பது பிடித்திருந்தது. அதற்கு மட்டும் சென்று வந்தாள். ஒரு வருடம் போய் ஒன்றரை லட்சம் செலவழித்து ஒரு குந்துமணி எடைகூட குறையாமல் இருந்தாள்.

உடல் பருமனை லஷ்மி ஒரு பொருட்டாகவே எடுத்துக் கொண்டதில்லை. வரன் தேட ஆரம்பிக்கும்வரை அவள் வீட்டிலும் அப்படித்தான். அவள் அம்மா, தானாகவே நன்றாக சாப்பிடும் ஆறு வயது கொழு கொழு லஷ்மிக்கு, அவள் சாப்பிட்டு எழுந்தவுடன் கைக்கு ஒன்று என்ற கணக்கில் இரு இனிப்பை கையில் திணிப்பாள். லஷ்மிக்கு எந்த தின்பண்டம் என்றாலும் கைக்கு ஒன்றுதான்.

குழந்தை புஷ்டியாக வேண்டும் என்று அவள் முழித்திருந்த பொழுதெல்லாம் ஊட்டிவிட்டு ஜெர்ஸி பசு போல கொழுக்க வைத்துவிட்டாள் அம்மா.

ஒரு வயதிற்கு பிறகு லஷ்மி ருசிக்காக மட்டுமே சாப்பிட்டாள். பசியெடுக்கும் வரை காத்திருப்பதெல்லாம் எப்போதுமே இல்லை. ஒருவேளைக்கு பல பதார்த்தங்கள், வெளியே எங்காவது போனால் பை நிறைய நொறுக்குத் தீனி.

உணவு கட்டுப்பாட்டை பற்றியெல்லாம் யார் என்ன சொன்னாலும் காதில் போட்டுக்கொள்ளாமல் இருந்தவள் மூன்று மாதமாக பீரியட்ஸே ஆகாமல் இருந்ததில் பயந்து போய் டாக்டரை சென்று பார்த்தாள்.

எல்லா டெஸ்டும் எடுத்து பார்த்துவிட்டு லஷ்மிக்கு



பிசிஓஎஸ் இருப்பதாகவும், இருபது கிலோவாவது குறைக்காவிட்டால் இது அதிகமாகி குழந்தையே பிறக்காமல் போக வாய்ப்பிருப்பதாகவும் சொன்னார், டாக்டர்.

லஷ்மிக்கு குழந்தைகள் பிடிக்கும்; பெற்றுகொள்ளும் எண்ணம் இருந்தது.

டாக்டர், எக்ஸர்சைஸ் எல்லாம் எதுவும் இப்போதைக்கு வேண்டாம். முதலில் உணவை குறைத்தாலே நல்ல வெயிட் லாஸ் இருக்கும்.அதை செய்யுங்கள் என்று சொல்லி அனுப்பிவிட்டார்.

வீட்டுக்கு வந்தவுடன் கூகுளில் உள்ள அத்தனை டயட்டையும், யூ ட்யூபில் டயட் விடியோக்களையும் ஒன்றுவிடாமல் பார்த்தாள். எல்லா டயட்டும் இனிப்பை, நொறுக்கு தீனியை தவிர்க்கவே சொன்னது. இருப்பதிலேயே ஓரளவிற்கு சாப்பிட அனுமதிக்கும் டயட் பேலியோ என்பதால் அதை தேர்ந்தெடுத்தாள். அதில் தவிர்க்கச் சொல்லும் அரிசி, சப்பாத்தியெல்லாம் இல்லாமல் இருந்துவிட முடியுமென்று தோன்றியது.

டயட்டில் குதிக்குமுன் கடைசி ட்ரீட்டாக இப்போது கேக் செய்து கொண்டிருக்கிறாள்.

வெண்ணெய்யும் மைதாவும் முட்டையும் சக்கரையும் கொலம்பியன் கோகோ பவுடரையும், ஒரு பாத்திரத்தில் போட்டு, மழை நாளில் ஆட்கள் நடந்து உருவான ரோட்டோர சகதி போல ஒரு பதத்திற்கு அடித்துகொள்ள வேண்டும்.

வெண்ணைய் தடவி சற்று மாவு தூவிய கேக் டின்னில் இந்த கலவையை கொட்ட வேண்டும். கேக் டின்னை 40 நிமிடம் 180 செல்சியஸ் சூட்டில்

ஒவனில் வைத்து எடுத்தால் மெதுமெதுப்பான சாக்லேட் ஸ்பான்ஞ் தயார். அதன் மேல் சாக்லேட் க்ரீம் பைப்பிங் செய்து, பலவகை சாக்லேட்டுகள் அதன் மேல் பதிக்கப்பட்டவுடன் சாக்லேட் கேக் ரெடி.

ஸ்பானன்ஞ் நல்லவிதமாக தயாராகி ஒவனை விட்டு வெளிவந்துவிட்டது. இன்னும் ஒரு மணி அதை ஆறவிட்டு, பிறகு க்றீம் அலங்காரம் செய்து, சாக்லேட்டுகளை மேலே பதிக்க வேண்டும். அதன்பின் இன்ஸ்டாகிரமுக்காக ஒரு பத்து போட்டோவாவது எடுத்துக்கொண்டு, வெட்டி சாப்பிட வேண்டியதுதான்.

இன்றோடு இனிப்புக்கெல்லாம் ஒரு முழுக்கு. ஆறு மாதத்திற்கு வெறும் கறியும் காயும் மட்டும்தான். பொறுமையின்றி ஒரு மணி நேரமாவதற்காக லஷ்மி காத்திருந்தாள்.

### அமுது 1

அவளுக்கு தனியாக பெயரெல்லாம் இல்லை. நம் வசதிக்காக பெயரிட வேண்டுமென்றால் அவளை நடுவிற்பெண்பிள்ளை என்றழைப்போம். அவளுக்கு முன்னும் பின்னும் இரு ஆண் மகவுகளை ஈன்றனர் அவள் பெற்றோர். இவள் நடுவில் பிறந்த பெண் பிள்ளை என்பதால் அப்பெயர் அவளுக்கு பொருத்தமாக இருக்கும்.

பரத கண்டத்தின் நுனிப் பகுதியில், ஒரு சிறு மலை தொடரின் அடியில் வாழும் ஒரு சிறிய மக்கள் தொகுதியில், அவளும் அடக்கம். இவளுடைய தந்தை ஒரு பறவையின் பெயர்கொண்ட குழுவின் உறுப்பு. இம்மக்கள் பல கூட்டங்களாக / குழுக்களாக பிரிந்தே வாழ்ந்தனர். அனைத்துக் கூட்டங்களுக்கும் ஒரு பறவை குழுவுக் குறியாக இருந்தது.

ஒரு குழுவின் வேட்டை நிலங்களுக்குள் பிற குழுக்கள் நுழையக் கூடாது என்பது எழுதபடாத சட்டம். பிற குழு ஆட்களை பார்ப்பதே மிக அரிது. அவரவர் வேட்டை நிலங்களில் கிடைக்கும் கிழங்குகள், கொட்டைகள், பழங்கள், கிழங்குகள் மற்றும் வேட்டையாடிய விலங்குகளின் இறைச்சி, இவை மட்டுமே அம்மக்களின் உணவு. விவசாயமெல்லாம் இன்னும் அவர்கள் செய்து பழகவில்லை.அம்மலையடிவாரத்தில் இயற்கையாக உருவான குகைகளில்தான் வாசம்.

நடுவிற்பெண்பிள்ளை ஒட்டிய வயிறும், நீண்ட தசைகள் முறுக்கேரிய கால்களும், மின்னும் சருமமும் கொண்டிருந்தாள். அவள் உடலில் தேவைக்கு அதிகமாக ஒரு துளி சதையில்லை. தேவைபட்ட இடங்களில் அது குறையவுமில்லை. சூரியன் சற்று வானில் மேலேறியவுடன் மற்ற பெண்களுடன் சேர்ந்து உணவு சேகரிக்கப்போவாள். இன்றும் போனாள்.

நெருப்பிற்கு சுள்ளி பொறுக்குவது அதில் அவளுக்கு பிடித்தமானது. அவள் வயது பெண்கள் சுள்ளியை ஒருவர் மீது ஒருவர் வீசியும், கொடிகளையும் இலை தழைகளையும் அணிந்து அழகு காட்டிக்கொண்டும் விளையாடிக் கொண்டிருப்பார்கள். யாராவது அம்மாக்கள் பார்த்து சத்தம் கொடுத்தால் கொஞ்சம் சத்தம் குறையும். விளையாட்டு தொடர்ந்த கொண்டுதானிருக்கும்.

நாவல் மரங்களை பார்த்தால் நடுவிற்பெண்பிள்ளை ஓடி முதல் ஆளாய் மரத்தில் ஏறிவிடுவாள். கிளையில் உட்கார்ந்து அங்கேயே பறித்து ருசித்து முடித்தவுடந்தான் மிச்ச பழங்களை உலுக்கிவிடுவாள்.

நடுவிற் பெண்பிள்ளைக்கு இன்று நாவல் மரம் ஏறுவதில் பெரிய ஆர்வமில்லை. மற்ற சிறுமிகள் ஏறுவதை வேடிக்கை பார்த்து கொண்டிருந்தாள். இன்றிரவு அவளுக்கு நடக்க இருக்கும் திருமணம் அவள் மனதை பிரட்டிக் கொண்டிருந்தது.

இன்று முழு நிலவு. அவள் பூப்பெய்தி இன்றுடன் நாற்பது நாட்கள் ஆயிற்று. மகிழ்ச்சியும் கிளர்ச்சியும் பயமும் என கலவையான உணர்வுகளுக்கு ஆட்பட்டிருந்தாள். அவளுக்கு கணவனாக போகின்றவன் இவள் கூட்டத்திலேயே இருப்பவன்தான். அவன் அம்பு எய்து பழகும் போது பலமுறை அவனுக்கு அம்பு பொறுக்கி கொடுத்திருக்கிறாள். சில முறை நடுவிற் பெண்பிள்ளை நச்சரித்தால் அம்புவிட சொல்லியும் கொடுத்திருக்கிறான்.

இவர்கள் மணத்தின் விருந்திற்காக கிழங்குகளும் கொட்டைகளும் பழங்களும் அவள் கூட்டம் சேர்த்து வைத்திருந்தது. அவள் வருங்கால கணவனால் உயிருடன் பிடிக்கப்பட்ட ஒரு சிறு காட்டெருமையும் விருந்திற்காக கால் கட்டப்பட்டு காத்திருக்கிறது. நெருப்பூட்டி சுற்றி அமர்ந்து ஆடலும் பாடலுமாய் விருந்து அமர்க்களப்படும்.இப்படிபட்ட கொண்டாட்டங்களில் மட்டுமே வயிறு முட்ட உண்ணவும் குடிக்கவும் கிடைக்கும்.

அவளுக்கு இருப்பிடம் திரும்ப வேண்டும்; உடனே நிலவெழ வேண்டும் என தவிப்பாய் இருந்தது.

### நஞ்சு 2

லஷ்மி இரண்டு வாரங்கள் ஒரு துளி ஸ்வீட்டும் அரிசி சோறும் சப்பாத்தியும் இல்லாமல் இருந்துவிட்டாள். ஐந்து கிலோ எடை குறைந்திருந்தது. முதல் வாரமே நான்கு கிலோ வரை குறைந்துவிட்டாள்; இரண்டாவது வாரம் ஒரு கிலோ. இனி வரும் வாரங்களில் சற்று மெதுவாகத்தான் உடல் குறையும். ஆனால், இப்பொழுது இருப்பது போலவே டயட்டை சரியாக பாலோ செய்ய வேண்டும் என டாக்டர் கறாராக சொல்லிவிட்டார்.

லஷ்மிக்கு மூச்சு திணறாமல் ட்யூப் படிகளை ஏற முடிவதும், உட்கார்ந்த இடத்தில் இருந்து அதிகம் சிரமப்படாமல் எழுந்துகொள்ள முடிவதும் மிக சந்தோஷமாக இருந்தது.

அம்மாவிற்கு வாட்சாப்பில் டயட்டுக்கு முன், டயட்டுக்கு பின் என புகைப்படங்களை கொலாஜ் செய்து அனுப்பி அவளையும் சந்தோஷப்படுத்தினாள். பத்து கிலோ குறைந்தவுடன் முன் பின் படங்களை இன்ஸ்டாவில் போட வேண்டும் என நினைத்துக்கொண்டாள்.

தோலுடன் சிக்கனும் ப்ராகலியும் முட்டை கோஸிம்தான் அதிகம் சாப்பிட்டாள். சில நாட்களில் முட்டை அல்லது செம்மறி ஆட்டு கறி. வீட்டில்



திண்பண்டங்கள் எதையும் வைப்பதில்லை; அதை பற்றி நினைத்தும் பார்ப்பதில்லை.

அவனில் வைத்து அவித்தது, இல்லாவிட்டால் அடுப்பில் வதக்கி சாப்பிடுவது என இரண்டே ஆப்சன்கள் போர் அடிப்பதை தவிர, நினைத்த அளவிற்கு டயட் சிரமமாகவெல்லாம் இல்லை.

இப்பொழுது போடும் உடைகள் பெரிதாகி புதிதாக சின்ன சைஸில் உடைகள் வாங்கும் நாளுக்காக ஆவலுடன் காத்திருந்தாள்.

### அமுது 2

நடுவிற் பெண் பிள்ளை இப்பொழுது ஐந்து மாத கருவை சுமந்து கொண்டிருக்கிறாள். வயிறு சற்றே மேடேறி தெரிந்ததை தவிர அவளுடலில் வேறெந்த மாற்றங்களும் தெரியவில்லை. வழக்கம் போல் சுள்ளி பொறுக்க போய் கொண்டுதான் இருக்கிறாள். ஆனால், இவளை குழுவினர் நாவல் மரமேற அனுமதிப்பதில்லை.

இப்பொழுதெல்லாம் நாவற்பழங்களை விட பாதாமி கொட்டைகளைத்தான் தேடி எடுக்கிறாள். சிலவற்றை உடையில் மறைத்தும் வைத்துக்கொள்வாள். அவள் கணவனுக்கு பாதாமி கொட்டை மிகவும் பிடிக்கும். இரவில் அவர்கள் சிறு குகையில் தனித்திருக்கும் போது முன்பே உடைத்து வைத்ததை அவனுக்கு ஊட்டி விடுவாள்.

சில கொட்டைகளை எடுத்து ஒளித்துவிட்டு, இரவை நினைத்து தனக்குள் சிரித்துக்கொண்டாள். அவள் குழு முழுக்க குனிந்து தரையை துழாவியபடி நடந்து கொண்டிருந்தனர்.

இவ்வருடம் மழை தூறியதோடு சரி, அடித்து பெய்யவேயில்லை. மழைக் காலத்தில் காடு முழுக்க பரந்து கிடக்கும் மழைக் காளான் அங்கொன்றும் இங்கொன்றுமாய் வளர்ந்திருந்தது.

இப்படி மழை தப்பிய வருடங்களில் கோடையில் உணவே இல்லாமல் திண்டாட்டமாக இருந்தது என இரு வயசாளிகள் பேசிக்கொண்டிருந்தனர். நடுவிற் பெண்பிள்ளை ஒரு சிறுமி பொறுக்கி கொடுத்த சிறு

புளியம்பழத்தை சப்பிக் கொண்டு, பகல் கனவில் ஊறி நடந்து கொண்டிருந்தாள்.

### நஞ்சு 3

லஷ்மி கொதிக்கும் பாலில் கல்கண்டை கொட்டினாள். கொதி சற்று அடங்கி பால் குமிழியிட்டாடியது. குங்கும பூவை சிறிது தூவிவிட்டு, காஸை சிம்மில் வைத்தாள்.

ஆறு மாதத்தில் ஒன்பது கிலோ குறைந்திருந்தாள் லஷ்மி. முதல் நான்கு வாரங்கள் இருந்த உற்சாகம் வடிந்து மெல்ல மெல்ல அங்கொன்றும் இங்கொன்றுமாய் ஸ்வீட், அரிசியென சாப்பிட ஆரம்பித்தாள். கடந்த ஒரு மாதமாய் தினமும் டயட்டை உடைத்துக் கொண்டிருக்கிறாள். பத்தில் இருந்து ஒன்பது என குறைத்த எடை அதிகரித்துவிட்டது.

எவனோ காடை கூட்டத்து பையனுக்கு போட்டோ பார்த்து பிடித்திருக்கிறதாம்; அவன் வீட்டில் பெண் உடம்பு குறைத்தால் தேவலை என்று சொன்னார்களாம்; அம்மாவும் குறைத்து கொண்டிருக்கிறாள், இன்னும் ஒன்றிரண்டு மாதங்களில் நார்மல் எடைக்கு வந்துவிடுவாள், அப்பொழுது பெண் பார்ப்பது வைத்துக்கொள்ளலாம் என்று சொன்னாளாம்.

எவளாவது ஒல்லியா இருக்கறவள பாத்து கல்யாணம் பண்ணச்சொல்லு, இவனையெல்லாம் நான் கட்டமாட்டேன் என்று இப்பொழுதுதான் அம்மாவிடம் போனில் கத்திவிட்டு வைத்தாள்.

போனை வைத்த கையோடு எவன் என்ன சொல்றது என்ற ஆங்காரத்தில் பாயசத்திற்கு பாத்திரத்தை அடுப்பில் ஏற்றிவிட்டாள்.

இரண்டு மாதத்திற்கு முன்பே அவள் டாப், பதினெட்டு சைஸில் இருந்து பதினாறுக்கு மாறியது. புது டாப்பும் லெக்கிங்கும் போட்டு எடுத்த ஸெல்பியை இன்ஸ்டாவில் போட்டாள். உறவும் நட்பும் பாராட்டி தீர்த்தது. அப்பொழுது கிடைத்த சாதித்துவிட்டோம் என்ற நிறைவோ என்னவோ அதற்கு பிறகு லஷ்மியால் சரியாக டயட்டில் இருக்க முடிவதில்லை.

இரண்டு கையளவு பாஸ்மதி அரிசியை இன்னொரு கடாயில் வறுத்து, அதில் கொதித்து கொண்டிருந்த பாலை அது மூழ்கும் வரை ஊற்றி கிளறிவிட்டு, அதையும் சிம்மில் வைத்தாள்.

தன் கோபத்தை பாதாமையும் பிஸ்தாவையும் முந்திரியையும் கட்டிங் போர்டில் வைத்து வெட்டும் போது காண்பித்தாள். எப்பொழுதும் ஒரே போன்ற நீளவாக்கு திரிகளாய் இருக்கும் அவை சற்று வடிவம் குலைந்து இருந்தது இன்று. ஆனால், வெட்டிய பிறகு சற்று கோபம் குறைந்து ஆசுவாசமாய் இருந்தது.

அரிசி வெந்ததும் அரிசியையும் பாலையும், பாலும் கல்கண்டும் கொதித்துக் கொண்டிருந்த பாத்திரத்தில் மாற்றிவிட்டு, ஏலக்காய், நட்ஸ், உலர்ந்த திராட்சை போட்டு, அடுப்பில் சிறிது நேரம் வைத்திருந்து இறக்கினாள்.

பாயசத்தை ஒரு கப்பில் எடுத்துக் கொண்டு டேபிளில் உட்கார்ந்தாள். முதல் ஸ்பூன் சாப்பிட்டவுடன் ‘டிவைன்’ என்று முணுமுணுத்தாள் அவளையும் அறியாமல். முகத்தில் சற்று புன்னகைகூட அரும்பும் போல் இருந்தது. டேபிளில் இருந்த வாட்ஸாப், டிங் டிங் என மணியடித்துக் கொண்டு மெஸெஜ்களை போனுக்குள் கொட்டிக்கொண்டிருந்தது.

லஷ்மி எடுத்துப் பார்த்தாள். ப்ளூ பார்டர் போட்ட வெள்ளைத் துண்டில் சுற்றப்பட்ட பச்சிளம் குழந்தை கண்ணை மூடி பல கோணங்களில் படுத்திருந்தது புகைப்படங்களில். அவள் உயிர் தோழி கவிதாவின் குழந்தை, பிறந்த சில மணி நேரங்களே ஆன குழந்தை. முத்தங்களையும் வாழ்த்துக்களையும் தட்டினாள்.

குழந்தையை திரையில் விரல்களை ஒட்டி பெரிதும் சிறிதும் ஆக்கி நீண்ட நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பாயசத்தை இன்னொரு ஸ்பூன் எடுத்து வாய்க்குள் விட்டாள். விட்ட வேகத்தில் எழுந்து டாய்லெட்டுக்கு ஓடி வாஷ் பேசினில் வாயிலிருந்த பாயசத்தை துப்பிவிட்டு, வாய் கொப்பளித்து துப்பினாள். இனிப்பு வாயில் தங்கியிருப்பது போலவே இருந்தது அவளுக்கு. ‘ஷிட், ஷிட்’ என அரற்றிக் கொண்டு, கண்ணில் வழிந்த நீரை துடைக்கக்கூட தோன்றாமல், கொப்பளித்து துப்பிக்கொண்டே இருந்தாள்.

### அமுது 3

நிறைசூலியான நடுவிற் பெண்பிள்ளை சிலைத்து அமர்ந்திருந்தாள். அவளை சுற்றி அவள் கூட்டத்து பெண்கள் ஓங்கி குரலெடுத்து அழுது கொண்டிருந்தனர். அவள் உண்டு ஐந்து நாட்களுக்கு மேலாகிறது. அவள் கூட்டத்தில் இருந்த மற்றவர்கள் உணவென்று வாயிலிட்டு அதற்கும் அதிக நாளாகிறது.

இம்முறை கோடையின் உக்கிரம் காட்டை வெறும் கழிகளின் நிரையாக்கிவிட்டது. பொறுக்கவும் சேர்க்கவும் சுள்ளிகளை தவிர வேறொன்றுமில்லை. விலங்குகளும் இடம் பெயர்ந்துவிட்டன. சுற்றிலும் வேறு கூட்டத்தவர் வேட்டை நிலங்களாதலால் இவர்களால் இடம்பெயரவும் முடியவில்லை.

அவள் கணவன் நிறைமாத கர்ப்பிணி பட்டினி கிடப்பதை காண சகியாமல் இரண்டு கூட்டாளிகளுடன் இன்று காலை அண்டை கூட்டத்தாரின் வேட்டை நிலத்திற்குள் புகுந்துவிட்டான். அந்நிலத்தில் வற்றாத ஊற்று ஒன்றிருக்கிறது. நீண்ட தூரம் இடம்பெயர முடியாத விலங்குகள் இந்த சிறிய நீர் சுனையை தேடி நீர் அருந்த வந்தே ஆக வேண்டும். அண்டை கூட்டத்தாரும் அந்த நீர் நிலையை கண் கொட்டாமல் காவலிருப்பார்கள் என தெரிந்தேதான் நுழைந்தான்.

முதலில் காலில் அடிப்பட்ட மிளா ஒன்று நீரருந்த வந்தது. அண்டை கூட்டத்தார் அம்புகளுக்கு அது தப்பி, தத்தி தத்தி ஓட ஆரம்பித்தது. குத்தீட்டிகளுடன் அதை வேட்டையாட துரத்தி சென்றனர். ஓரிருவர் மட்டும் நீர் நிலையில் கண் வைத்து மறைந்து அமர்ந்திருந்தனர்.

ஒரு இளம் காட்டுப்பன்றி எச்சரிக்கையுணர்வெல்லாம் ஒன்றுமில்லாமல் நேராக நீர் நிலைக்குள்



இறங்கியது. ஓராள் தூக்கிக்கொண்டு ஓடக்கூடிய எடை கொண்ட விலங்கு. நடுவிற் பெண் பிள்ளையின் கணவன் மூன்று அம்புகளை ஒன்றுக்கு பின் ஒன்றாக மிக வேகமாக செலுத்தினான். ஒன்று பன்றியின் கண்ணிலும் ஒன்று கழுத்து நரம்பிலும் இன்னொன்று பின்னங்கால் இரண்டிலும் சேர்த்து இறங்கியது. பன்றி நின்ற இடத்திலேயே விழுந்தது. கூட்டாளிகளுக்கு கண் காட்டி விட்டு, இவன் அம்பின் திசை கணித்து இவர்களை நோக்கி குத்தீட்டியுடன் ஓடி வந்த அண்டை கூட்டத்தார் இருவர் மீது அம்பெய்தான். அவன் கூட்டாளிகள் அதற்குள் பன்றியை தூக்கிக்கொண்டு அவர்கள் வேட்டைக்காடு நோக்கி ஓடத்தொடங்கினர்.

அம்புக்கு தப்பிய ஒருவன் மற்றவர்களை வரவழைக்க கொம்பூதினான்.

அவன் தொண்டை குழியிலும் ஒரு அம்பை இறக்கிவிட்டு, காட்டை நோக்கி ஓடினான் நடுவிற் பெண்பிள்ளையின் கணவன்.

அவன் கூட்டாளிகள் பன்றியோடு இருப்பிடம் வந்து சேதி சொல்லியவுடன், ஈட்டியும் அம்பும் எடுத்துக்கொண்டு இவன் கூட்டத்து ஆண்கள் காடு நோக்கி ஓடினர்.

ஒரு மணி நேரம் கழித்து முதுகெல்லாம் முள்ளம் பன்றி முட்கள் போல குத்தீட்டிகள் துளைத்து நின்ற அவள் கணவனின் உடலை தூக்கி வந்து திடலில் கிடத்தினர்.

அப்பொழுது அதிர்ச்சியில் விழுந்தவள், அவன் உடலை வெறித்துக்கொண்டு சிலையாய் விழுந்த இடத்திலேயே அமர்ந்திருந்தாள். அவன் சடலத்தை புதைக்க எடுத்து சென்ற பின்னும் அசையாமல் அப்படியே அமர்ந்திருந்தாள்.

புதைத்துவிட்டு வந்தவர்கள் அந்தி சாய்வதற்கு முன்னமே நெருப்பு மூட்டி பன்றியை நடுவில் மூங்கில் குத்தி, இரு பக்கம் கவைகள் நட்டு தூக்கி கட்டினர். கூட்டம் முழுதும் ஒரு சொல்லும் பேசாமல் பன்றி வெந்து கொண்டிருப்பதை தீயை சுற்றி உட்கார்ந்து பார்த்து கொண்டிருந்தது. நடுவிற் பெண் பிள்ளை இன்னும் அவள் உட்கார்ந்த இடத்தில் இருந்து எழாமல் அங்கேயே வெறித்த பார்வையுடன் உட்கார்ந்திருந்தாள். அருகில் ஓர் முதியவள் மட்டும் அமர்ந்திருந்தாள்.

கறி வெந்தவுடன், மூதாட்டி எழுந்து சென்று வெந்த கறியின் ஒரு பெரிய துண்டை இலையில் வைத்து அவள் முன் வைத்துவிட்டு சென்றாள். கறியில் இருந்து எழுந்த புகையை பார்த்துக் கொண்டிருந்தவள் சற்று நேரம் கழித்து ஒரு துண்டை பிய்த்து வாயிலிட்டாள். ஊனமுது அவள் வாயில் கரைந்து உயிரில் கலந்தது. ●

**தன்ராஜ் <dhanraj.mani@gmail.com>**

# எங்கள் பூமி எங்கள் வானம்

## மாலதி மைத்ரி

இருபதாம் நூற்றாண்டு வரை, எழுதப்பட்ட, ஆவணப்படுத்தப்பட்ட கதைகள், வரலாறுகள் அனைத்தும், ஆணை மையப்படுத்தும் முதன்மைப்படுத்தும் பிரதிகள். எனவே, ஆண்மையவாத ஆணாதிக்கச் சமூகத்தால் புறக்கணிக்கப்பட்ட, மறைக்கப்பட்ட பெண் வரலாற்றை, பெண் இயக்கத்தை, பெண் எழுத்தை, பெண் அரசியலை இந்தியளவிலும் உலகளவிலும் பேச, ஆவணப்படுத்த, பெண் எழுத்துக்கானப் பதிப்பகங்களை, நிறுவனங்களை உருவாக்க வேண்டுமென்று சிலர் முயற்சிகளைமேற்கொண்டனர். எண்பதுகளில் டெல்லியில் இந்தி -ஆங்கிலம் இருமொழியிலும் பெண் எழுத்துக்கானப் பதிப்பகம் ஒன்று உருவாக்கப்பட்டது. 1984இல் ஊர்வசி புட்டாலியா, ரிது மேனன் இணைந்து உருவாக்கிய 'Kali For Women' பெண் எழுத்துக்கானப் பதிப்பகம் இருபது ஆண்டுகளில் 2003இல் ஊர்வசியின் 'Zubaan Books' பதிப்பகமாகவும் ரிதுவின் 'Women Unlimited' பதிப்பகமாகவும் பிரிந்து, தற்போது பெண் எழுத்துக்களை ஆங்கிலத்தில் பதிப்பித்து வருகின்றன.

பல பாடங்கள் ஏற்கனவே நாம் கற்றதுதான்; என்றாலும், சில நேரங்களின் நம் கண்கள் நம்மை ஏமாற்றிவிடுகின்றன. நம் கண்முன்னே நிற்கும் ஆவணத்தை நம்பிவிடுகிறோம்; அது பெண்ணியம் என்ற பெருஎழுத்துடன் வந்தால் கூடுதலாய். எழுத்து அரசியலின் மாற்று இயக்கப் போக்கு அடையாளத்துடன், செவ்வியல் வடிவமைப்பில் அச்சடிக்கப்பட்டு வந்தாலும், அதில் பாதி உண்மைகள் மட்டுமே கிடைக்கும், மீதி களத்தில் அனுபவத்தில் நாம் தேடிக் கண்டடைய வேண்டும்.



இந்தியத் தலைநகரில் பெண் எழுத்துக்கானப் பதிப்பகங்களை உருவாக்கிய ஆதிக்கச்சாதி பெண்களிடம் செயல்படும் நுட்பமான சாதி வர்க்க, ஆதிக்க வர்ணாசிரம உளவியலை நாம் அடையாளப்படுத்திப் பேசியாக வேண்டும். இன்றைய உலகமய முதலாளித்துவ தாராளவாதம் அளித்த நுகர்வுக் கலாச்சார சந்தையில், இந்தியாவில் இவ்வகை பெண் எழுத்துப் பதிப்பகங்கள் முதன்மைப்படுத்திப் பேசும் பெண்ணியம், பெண் விடுதலை, ஆதிக்கச் சாதி வர்க்க வர்ணாசிரம பெண்களின் நலனுக்கானவை, அச்சாதியப் பெண்களின் வளர்ச்சி மேம்பாட்டுக்கானவை என்பதை அவர்கள் பதிப்பின் வரலாறு உறுதிப்படுத்துகிறது.

ஒடுக்கப்பட்ட விளிம்புநிலை பெண் எழுத்துக்களைத் தொகுக்க முனைந்தாலும், அதையும் ஒரு ஆதிக்கச்சாதி மேட்டுக்குடி வர்க்க பெண் தொகுத்தளிப்பார்கள். நாம் படைப்பாளியாக மட்டுமல்ல, குறைந்தபட்சம் விளிம்புநிலை எழுத்துக்களைத் தொகுக்கும் ஒரு தொகுப்பாளர் என்ற அடையாளத்தைக்கூட தர மறுப்பவர்கள். ஒடுக்கப்பட்ட, விளிம்புநிலைப் பெண்களை நுட்பமாக புறக்கணிக்கும், ஒடுக்கும் அரசியலை மறைமுகத் திட்டமாக்கி செயல்படுத்தும் நிறுவனங்களிவை.

இந்த ஆங்கிலப் பதிப்பகங்கள் பதிப்பித்த பெண் எழுத்து, பெண்ணிய நூல்களில் ஐந்து சதம்கூட, ஒடுக்கப்பட்ட பெண்கள், விளிம்புநிலை பெண்கள் எழுதிய அல்லது தொகுத்த நூல்கள் அடங்காது. இப்பதிப்பகங்கள், ஒடுக்கப்பட்ட விளிம்புநிலை பெண்களின் படைப்புகளை முற்றிலும் புறக்கணித்தால், அடையாளப்படுத்தாமல் நகர்ந்தால், முற்போக்கு நடுநிலை அரசியல் சாயம் வெளுத்துவிடும் ஆபத்தை அறிந்து, அரசியல் காய் நகர்த்துபவர்கள். மழைக்கு திண்ணையோரம் வந்து நில், பாதகமில்லை என்பதுபோல் ஒதுங்க இடம் கொடுத்திருப்பவர்கள்.

இவ்வகை பதிப்பகங்கள் பதிப்புத்துறையில் செயல்படத் தொடங்கிய காலக்கட்டத்தில்தான் தலித் பெண் எழுத்துக்கள், விளிம்புநிலை பெண் எழுத்துக்கள் புதுவீச்சில் வெளிவரத் தொடங்கின. மாநில மொழிகளில் மட்டுமே வெளியான அத்தகைய படைப்புகளை ஆங்கிலமாக்கி உலகுக்கு அளித்திருக்க வேண்டும். ஆனால், அதற்கான தடயத்தை இப்பதிப்பகங்களில் நூற்பட்டியலில் கண்டெடுக்க முடியாது.

டெல்லி வாழ்க்கையில் மனித உரிமைப் போராட்டங்கள், கூட்டங்களில் டெல்லிப் பல்கலைக்கழக இந்தி பேராசிரியர்கள் இருவர் அறிமுகமாகினர். இவர்கள் எழுத்தாளர்கள், பொதுவுடமை சித்தாந்தவாதிகள் மற்றும் மனிதவுரிமைப் போராளிகள். டெல்லியில் நடக்கும் முக்கியமான மனிதவுரிமைப் போராட்டங்களில் கருத்துச் சுதந்திரத்திற்கான போராட்டங்களில் இப்பேராசிரியர்களை பெரும்பாலும் பார்க்கலாம். போராளி அக்டாமிஷியன்ஸ். 'அணங்கு' பெண்ணியப் பதிப்பகச் செயல்பாடுகளை அவர்களின் காதுகளில் போட்டுவிட்டு, இந்தியில் எழுதும் பெண் எழுத்தாளர்கள், தலித் விளிம்புநிலை பெண் எழுத்தாளர்கள், கவிஞர்கள் பட்டியலும், அவர்களின் நூல்களை அறிமுகப்படுத்தவும் தனித்தனியே கோரிக்கை வைத்தேன். ஒருவர் தரவில்லையென்றால்



இன்னொருவர் தருவாரென்ற கணக்கில். மீண்டும் சந்திப்புகள் நிகழும் போது நினைவூட்டவும் தவறுவதில்லை.

பெண் எழுத்தாளர்கள் என்று கேட்டிருந்தால் அம்ருதா ப்ரிதம் தொடங்கி ஒரு பட்டியல் கொடுத்திருந்திருப்பார்கள். தலித், விளிம்புநிலை என்ற இரு சொற்கள் அவர்களை அவமானப்படுத்திவிட்டதாகவோ அல்லது என்னுடைய தரத்தைத் தாழ்த்திவிட்டதாகவோ கருதியிருப்பார்கள் போலும். தருகிறேன் என்றவர்கள் இரண்டு ஆண்டுகளை முழுசா முழுங்கியதுதான் மிச்சம்.

மூன்றாண்டுகளுக்கு முன் ஒரு பன்னாட்டு நிறுவனத்தின் வரவேற்பறையில் ஒரு பணி நிமித்தமாக காத்திருக்கும் போது 'Zubaan' பதிப்பகத்தின் 'காபி டேபிள்' நூல் ஒன்றை பார்த்தேன். இந்திய பெண் ஆளுமைகளை பற்றிய, A4ஐ விட சற்று பெரிய A3ஐ விட சற்று சிறிய அளவில் கெட்டி அட்டையுடன் வண்ணப்படங்கள் நேர்காணலுடன் அறிமுகப்படுத்தும் 'கனமான' ஆவணமது. தமிழிலிருந்து சிவகாமியும் வேறொருவரும் இருந்தனர். அந்த வேறொருவரின் சமூகப்பணி, களப்பணி என்ன என்பது மில்லியன் டாலர் கேள்வி இங்கு?

கௌரி லங்கேஷ் படுகொலையை கண்டித்து, நீதிவேண்டி பத்துக்கும் மேற்பட்ட இயக்கங்கள் தீஸ்தா செதல்வாட், ஆனி ராஜா, ரஜினி திலக் ஒருங்கிணைப்பில் 5.10.217இல் டெல்லி ஜந்தர் மந்தர் நோக்கி பேரணியாக வந்து திரண்டோம். குல்தீப் நய்யர் தாமதமாக வந்து சேர்ந்தார். நடக்க முடியாத முதுமையிலும் 93 வயதில் அவர் ஆர்ப்பாட்டத்துக்கு வந்தது ஆச்சரியம். நம்மூர் எழுத்தாளர்கள், அறிவுஜீவிகள் போராட்டக்களம் இரும்படிக்குமிடம், ஈக்கென்ன வேலையின்னு வாளாயிருப்பார்கள். டெல்லியில் மூத்தப் படைப்பாளிகள், மூத்தப் போராளிகளை முன்னிறுத்தியும் முன்நின்றும் மக்கள் போராட்டங்களை, நீதிக்கானப் போராட்டங்களை நடத்தும் அறவுணர்வை, சுரணையிருந்தால்

தமிழ் அறிவுலகம் வடக்கிலிருந்து தாராளமாகக் கற்றுக்கொள்ளலாம்.

கண்டன உரையாற்றிவிட்டு மேடையிலிருந்து இறங்கிய தேசிய தலித் பெண்கள் இயக்கத்தின் அமைப்பாளர் ரஜினி திலக்கை சங்கபாலி அறிமுகம் செய்து வைத்தார். நீட்டால் கொல்லப்பட்ட அனிதாவின் மரணத்துக்கு நீதிக்கேட்டும் நீட்டை ரத்துச் செய்யக் கோரியும் 2.9.2017இல் இதே ஜந்தர் மந்தரில் நானும் பிரேமும் முன்னெடுத்து நடத்திய போராட்டத்தில் கலந்துக்கொண்டு அறிமுகமான, ஜௌன்யுவில் படிப்பை முடித்த மாணவி சங்கபாலி. ரஜினி திலக்கிடம் தமிழ் எழுத்தாளர், பெண்ணியப் பதிப்பாளரென்று என்னை அறிமுகப்படுத்திக் கொண்டதும் ரஜினியின் கண்களில் ஆயிரம் சூரியகாந்திகள் விரிவதைக் கண்டேன். தானும் எழுத்தாளரென்று என்னை கட்டி அணைத்துக்கொண்டார்.

தலித், விளிம்புநிலை பெண் எழுத்தாளர்களை இணைத்து 'தலித் பெண் படைப்பாளிகள்' அமைப்பை நடத்தி வருவதாகவும் அடுத்தக் கூட்டத்தில் கலந்துக்கொள்ளுமாறும் அழைப்பு விடுத்தார் ரஜினி திலக். அக்டோபர் இரண்டாம் சனிக்கிழமை ரோகிணி சராயில் கவிஞர். பேராசியர் ரஜினி அனுராகி வீட்டில் நடந்த பெண் எழுத்தாளர்கள் சந்திப்பில் கலந்துக்கொண்டேன். நாக்பூரிலிருந்து எழுத்தாளர் சுசிலா தாக்புரே வந்திருந்தார். எழுத்தாளரும் பேராசிரியருமான ரஜினி டிசோடியாவையும் அங்கு சந்தித்தேன். அன்று மேலும் இரண்டு ரஜினிகள் எழுத்தாளராக அறிமுகமாகி என்னைத் திகைப்பிலாழ்த்தினார்கள்.

அடுத்தக் கூட்டம் நவம்பரில் எனது வீட்டில் நடந்தது. அப்போதுதான் 'அணங்கு' மூலம் இந்தி தலித் பெண் படைப்புகளைத் தொகுத்து வெளியிட அனுமதிக் கேட்டேன். சிறுகதைகளை சேகரித்துத் தொகுத்துத் தருவதாக மகிழ்ச்சியுடன் ரஜினி திலக் பொறுப்பேற்றுக் கொண்டார். நவம்பரில் ஒரு சனிக்கிழமை யமுனை ஒட்டி அமைத்திருக்கும் வாஷிராபாத் நகரில் ரஜினி திலக்கைப் பார்க்கச் சென்றேன். இரண்டடுக்குகள் கொண்ட சிறிய விடு. ஒரு பெரிய அறையின் மூன்று சுவர்களையும் புத்தகத்தால் மறைத்து நூலகமாக மாற்றியிருந்தார். இந்தியா முழுவதுமிருந்து இந்தியில், ஆங்கிலத்தில் வெளிவந்த தலித் எழுத்தாளர்களின் படைப்புகள், சுயசரிதைகள், ஆய்வு நூல்கள், தலித் வரலாற்று ஆவணங்கள், தொகுப்புகள் அவர் சேகரிப்பிலிருந்தன. டெல்லியில் தலித் இலக்கியம், தலித் வரலாறு, தலித் ஆளுமைகளை ஆய்வு செய்யும் மாணவர்களுக்கு புதையலிவை.

நான் சென்றிருந்த போது ஜாமியா மில்லியா இஸ்லாமியப் பல்கலை ஆய்வு மாணவர் ஒருவர் குறிப்புகள் எடுத்துக் கொண்டிருந்தார். தொலைவிலிருந்து தினமும் வந்து செல்ல முடியாத மாணவர்கள் இரண்டு மூன்று நாட்கள் தங்கியிருந்து வீட்டிலிருப்பதை சமைத்துச் சாப்பிட்டுக் குறிப்பெடுத்துச் செல்லவும் அனுமதியுண்டு. கம்யூனிஸ்ட் கட்சியில் அறிமுகமான தோழருடன் திருமணமாகி, விவாகரத்துக்குப் பின் தனியே வசிப்பாதாகவும், அவரது மகள் ஜோதி ராஜஸ்தானில் வேலைப் பார்ப்பதாகவும் பேச்சுவாக்கில் சொன்னார்.

அவர் எழுதிய நூல்களைப் பார்க்க விரும்புகிறேன் என்றதும், செடியிலிருந்து பூக்களை பறித்து வைப்பது போல், நூல்கள் அடுக்கிலிருந்து அச்சிறிய மேசைக்கு வந்தன. அச்சரம் அறியாத குழந்தை மாதிரி புரட்டிக் கொண்டிருந்த என்னிடம் ஒவ்வொரு நூலைக் குறித்தும் சின்ன விளக்கம் கொடுத்தார். இந்தி மொழியில் எழுதிய, இந்தியில் மொழிபெயர்ப்பான கதைகள், கவிதைகளை இவர் தேடித் தொகுத்த 'சமகால பாரத தலித் பெண் படைப்புகள்' மூன்றுத் தொகுப்புகளும் மிக முக்கியமானவை (Samakalin Bharathiya Dalit Mahila Lekhan, vol.1 - 2011, vol.2 - 2015, vol.3 - 2017).

ரஜினி திலக்கின் முதல் நூல் சாவித்திரிபாய் பற்றி 1998இல் எழுதியது. சாவித்திரிபாய் ஏற்றிய ஒளியில் தன் பாதையை கண்டடைந்திருக்கிறார் ரஜினி. 2017இல் இந்தியில் வெளியிட்ட சாவித்திரிபாய் புலேவை அறிமுகப்படுத்தும் சிறிய கையேடு 10,000க்கும் மேற்பட்ட பிரதிகள் டெல்லி முழுதும் பள்ளிக் குழந்தைகளிடம் சென்றுச் சேர்க்கப்பட்டிருக்கிறது. அம்பேத்கரின் சிந்தனைகள் தொகுப்பு இவரது மற்றொரு நூல்.

Padchaap (Marching Steps - 2000), Hawa Se Bechain Yuvtiyan (Restless Women - 2015) ரஜினியின் இரண்டு கவிதைத் தொகுப்புகள். Apni Zameen Apna Aasman (எனது பூமி எனது வானம்) சுயசரிதையின் முதல் பாகம் 2017இல் வெளிவந்திருக்கிறது. இரண்டாம் பாகம் எழுதி முடித்துவிட்டதாவும் 2018இல் அச்சாகிவிடும் என்றும் சொன்னார். தனது சிறுகதைகள் தொகுப்பும் விரைவில் வெளிவருமென்று செய்தியாக சொன்னார்.

டிசம்பர், ஜனவரி டெல்லிக் குளிரிலிருந்துத் தப்பிக்க புதுவை வந்துவிட்டேன். 2018 பிப்ரவரி டெல்லித் திரும்பியதும் தொடர்புக்கொண்ட ரஜினி தீதி, உத்திரபிரதேசம் ஷரங்பூரில் 'பீம் சேனா' தலைவர் சந்திரசேகர் ஆசாத்தின் போராட்டம், அதையொட்டிய கைதுகள், தலித் கிராமங்கள் சூறையாடலென்று அப்பகுதியே போர்களமாக இருப்பதாகவும், இரண்டுமுறை பாதிக்கப்பட்ட மக்களைச் சந்தித்துத் திரும்பியதையும், பீகார் தலித்கள் மீது தாக்கூர்கள் நடத்திய வன்முறையில் இருவர் கொல்லப்பட்டதாகவும், உண்மைக் கண்டறியும் குழுவாக சென்று வந்ததாகவும் சொன்னார்.

"ஹரியானா, பானிப்பட்டு அருகிலுள்ள கிராமத்தில் 11 வயது பள்ளிச் சிறுமி பாலியல் பலாத்காரம் செய்து எரிக்கப்பட்ட சம்பவத்தில் பாதிக்கப்பட்ட குடும்பத்தைச் சந்தித்து ஆறுதல் சொல்ல நாம் குழுவாக செல்வோம் இணைந்துக்கொள் மாலதி" என்றார். ஜாமியா மில்லியா இஸ்லாமிய பல்கலை பேரா. ஹேமலதா மகேஷ்வர், டெல்லி பல்கலைப் பேரா. ரஜத்ராணி மீனா, ரஜினி தீதி, நான் அடங்கிய நான்கு பெண்கள் ஒரு வாடகை கார் பிடித்துக்கொண்டு பாதிக்கப்பட்ட குடும்பத்தைச் சந்தித்து ஆறுதல் கூறிவிட்டு வந்தோம். பிரதமர், ஹரியானா முதல்வர், மத்திய, மாநில பெண்கள் ஆணையத்திற்கு பாதிக்கப்பட்ட குடும்பத்திற்கு நீதிகிடைப்பதை உறுதிப்படுத்தக் கோரியும் பெண்களை பாதுகாக்கத் தவறும் மத்திய, மாநில அரசுகளைக் கண்டித்தும் மனு



சிவகாமியுடன் ரஜினி திலக்

அனுப்பி வைக்கப்பட்டது.

பிப்ரவரி இரண்டாம் வாரம் பேராசிரியர் எழுத்தாளர் ரஜினி டிசோடியா வீட்டில் தலித் பெண் படைப்பாளிகள் கூட்டம் நடந்தது. அப்போது நாளை மாலை வீட்டுக்கு வந்து தமிழில் வரவேண்டிய கதைகளின் நகல்களைத் தருவதாக சொன்னார் ரஜினி.

“இங்கு எழுதும் தலித் பெண்களின் படைப்புகள் ஏன் இன்னும் ஆங்கிலத்தில் வரவில்லை, அதற்கான முயற்சிகள் ஏன் எடுக்கப்படவில்லை, உங்களையெல்லாம் விபத்தா சந்தித்துத்தான் அறிந்துகொள்ள முடியுமென்றால் இந்திய அறிவுசூழல், பதிப்பு சூழலின் சாதிய மேலாதிக்கத்தின் பாகுபாட்டிற்கு இதுவே சாட்சி” என்றேன்.

“இங்கு ஊடகம், பதிப்புத்துறை சாதிய புரையோடிய அமைப்புகள் என்பது அறிந்ததுதானே மாலதி. ஊர்வசி புட்டாலியா நல்ல தோழிதான். நிறுவனம் நடத்தும் எல்லாரும் பிராமணவாதிகள் அல்லது பிராமண சிந்தாந்தத்தின் அடிமைகள். நம்மையெல்லாம் உலகுக்கு காட்டாமல் இருக்க காரியம் செய்பவர்கள்” என்றவுடன், “இப்பவே பேசுங்கள் ஒரு தொகுப்பை ஆங்கிலத்தில் கொண்டு வர, என்ன சொல்கிறார் என்று பார்க்கலாம்” என்றேன்.

என்னெதிரில்தான் தொலைபேசியில் ஊர்வசி புட்டாலியாவுடன் பேசினார். பேசிவிட்டு சொன்னார்: “என்னைத் தொகுத்துத் தரச்சொல்கிறார். கண்டிப்பாக கொண்டு வருகிறாராம். அப்படியே இந்தியிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பாளரைக் கண்டுப்பிடித்து நான் மொழிபெயர்த்தும் தரவேண்டும்” என்கிறார் என்றதும், நான் சத்தமா சிரிக்க, அவரும் சேர்ந்துகொண்டார்.

மறுக்காத மாதிரியும் ஆனது, ஏன் வெளி யிடவில்லையென்று கேட்டால் நீங்கள் மொழிபெயர்த்துக்கொடுத்திருந்தால் போட்டிருப்பேன் என்று தட்டிக்கழிக்க வசதியான ஒரு பதில்.

மறுநாள் ‘அணங்கு’க்காகத் தேர்வு செய்த ஒன்பது இந்தி சிறுகதைகளுடன் என் இல்லம் வந்தார். இன்னும் சில கதைகள் கொண்டுவந்து தருவதாக உறுதியுமளித்தார். நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தோம். மணவாழ்வின் தோல்வி, முன்னெடுத்தச் சமூகப் பணிகள், போராட்டங்கள், குடும்பப் பின்னணி என்று அனைத்தையும் என்னிடம் சொந்தத் தங்கையிடம் தணித்துக்கொள்வதுபோல் சரசரவென மழை மாதிரிக் கொட்டித் தீர்த்தார். திடீரென்று உருவான முதுகுவலிக்கு ஒரு மாதமாய் பிசியோதெரபி சென்றுவந்து கொண்டிருந்தார். “பயணத்தைக் குறைத்துக்கொண்டு உடல்நலனில் கவனம் செலுத்துங்க தீதி” என்றேன். சர்க்கரை நோய்க்கு மருந்தெடுப்பதையும் சர்க்கரை கட்டுப்பாட்டிலிருப்பதாய் கைவிட்டிருந்தார். “சர்க்கரை வியாதி நமக்குள் வாழும் பல் பிடுங்கிய பாம்பு. சிறிது சிறிதா விசத்தை நம் ரத்தத்தில் கசியவிட்டு உள்ளுறுப்புகளை நாசமாக்கிவிடும். விசத்தைத் முறிக்க சிறிய அளவில் தொடர்ந்து மருந்தெடுப்பது அவசியம். தீதி மருந்தெடுக்காமல் விடக்கூடாது” என்று கண்டிப்புடன் சொன்னேன்.

“இனி கவனமா இருக்கேன் மாலதி, நாம் முன்பே சந்திக்காமல் போனோம். உன் நட்பு கிடைத்தது எவ்வளவு சந்தோசமாக இருக்கு” என்று சொல்லிவிட்டு சென்றது இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

அநீதிக்கு எதிராக தன்னிச்சையாக களத்தில் உருவாகும் போராளிகள் சமரசமற்று இறுதிவரை கொள்கைக்காக நிற்பார்கள் என்பதற்கு ரஜினி திலக் வாழ்க்கையும் உதாரணம். ஐடிஐயில் தொழிற்கல்வி படிக்கும் பதின்பருவத்தில் மாணவிகளின் உரிமைக்காக அமைப்புக் கட்டி போராட்டங்களை நடத்தி தன்னை ஒரு தலைவராக வளர்த்துக்கொண்டவர். பிறகு முற்போக்கு மாணவர் அமைப்புடன் இணைத்து மாணவர் போராட்டங்களை முன்னெடுத்திருக்கிறார். முற்போக்கு மாணவர் அமைப்பில் நிலவிய தலித் விரோத போக்கு சகிக்காமல் கருத்து முரண்பாட்டில் அப்போதே வெளியேறியிருக்கிறார். தன்னை ஒரு அம்பேத்கர்வாதியாக அடையாளம் கண்டப்பின் மறுக்கப்படும் தலித், ஆதிவாசி விளிம்புநிலை மக்களின் உரிமைகளுக்காக, சமூகநீதிக்காக, விடுதலைக்காக, சமூகம், அரசு நிர்வாகம், அரசியல் கட்சிகள், கல்வித்துறை, நீதித்துறை, ஊடகத்துறையென எல்லா இடங்களிலும் களத்தில் முன்நின்று போராடிய சமகாலப் போராளி.

தலித்களின் மறுக்கப்படும் உரிமைக்காகக் குரல்கொடுக்க மறுக்கும் வெகுசன ஊடகங்களின் சாதியாதிக்க மேலாண்மையை முறியடிக்கவும், வெகுசன ஊடகங்களில் புறக்கணிக்கப்படும் தலித் ஊடகவியலாளர்கள் இடஒதுக்கீட்டை உறுதிப்படுத்தவும், ‘மாற்று தலித் ஊடக’ (Alternative Dalit Media Centre) மையத்தை டெல்லியில் தோற்றுவித்து, தலித் ஊடகவியலாளர்களை ஒன்றிணைத்து, வெற்றிகரமான நிறுவனமாகச் செயல்படுத்திக் காட்டி யிருக்கிறார். சமகால தலித்களின் சமூக, பொருளாதார, அதிகார, அரசியல், விடுதலை போராட்ட வரலாற்றில் ஆய்வாளர்கள் இதனை மைல்கல்லாக அடையாளப்படுத்துகிறார்கள். இதன்பிறகே தலித்துகளின் பல சுதந்திரமான மாற்று ஊடக மையங்கள் இந்தியாவில் பிற மாநில மொழிகளிலும் தோன்றின.

அரசு ஊழியாராக இருந்து விருப்ப ஓய்வடைந்து தொண்டு நிறுவனம் தொடங்கிய சில ஆண்டுகளிலேயே மூடப்பட்டது. அவரது சொற்ப ஓய்வூதியத்தில்தான் தலித் மக்கள் பாதிக்கப்பட்டால் உடனடியாய் களத்தில்

நின்று போராட்டங்களை முன்னெடுத்திருக்கிறார் ரஜினி. சமூக விடுதலைக் களத்தில், தலித் அரசியல் அதிகாரம், அறிவு, பண்பாடு, பெண்ணியமென அனைவரையும் ஒருங்கிணைக்கும் ஆரத்தின் மையமாகவும் வழிநடத்தும் தலைமையாகவும் தன்னையே சக்கரமாக்கி வட மாநிலங்கள் முழுதும் அம்பேத்கர் வழியில் கற்பி, ஒன்று சேர், கிளர்ச்சி செய் என வாழ்நாளில் 35 ஆண்டுகளையும் முழுதாய் ஒப்படைத்தவர்.

ரஜினி திலக்கின் தங்கை கவிஞர் அனிதா பார்தி. 'ஜன் சம்மன் பார்டி' கட்சி தலைவரும், தலித் - ஆதிவாசிகள் விடுதலைப் போராளியுமான அசோக் பார்தி இவரது தம்பி. ஏழை தையற் தொழிலாளியின் மூத்த மகளாக பிறந்து தனது தம்பித் தங்கைகளுக்கு மட்டுமில்லை தலித் அரசியல், படைப்பியல் இயக்கத்திற்கு ஒரு முன்மாதிரியை வழிகாட்டுதலை சமகாலத்தில் உருவாக்கிக் காட்டியவர். எந்தவித வலுவான சமூக, பொருளாதார, அரசியல், பின்னணியுமில்லாமல் தனது தனிப்பட்டப் பிரச்சினைகளைகளால் துயரங்களால் சோர்ந்து முடங்கிவிடாமல் சமூகத்துக்காக தன்னை அர்பணித்தப் பேராத்மா ரஜினி திலக்.

தொடர்ந்து ரஜினியுடன் தொலைபேசியில் உரையாடிக்கொண்டிருந்தேன். மார்ச் மூன்றாவது வாரம் ஒரு மதியம் பேசும்போது ஒரு ஆய்வு மாணவர் போனை எடுத்தார். “தீதி முதுகு வலியால் படுத்திருக்கிறார், போனைத் தருகிறேன்” என்றார். வலிமிகுந்த உடைந்த குரலில், “முதுகு ரொம்ப வலிக்கிறது மாலதி, ரெஸ்ட் எடுக்கிறேன்” என்றார்.

“ரஜினி தீதி இவ்வளவு வலியில் வீட்டில் ஓய்வெடுப்பது வேண்டாம்; நாளை உடனே மருத்துவ பரிசோதனைக்குப் போங்கள். நாளை வந்து வீட்டில் பார்க்கிறேன்” என்றேன்.

“நாளை மருத்துவமனைக்கு போய்விட்டு வந்து பேசுகிறேன் மாலதி” என்று போனைத் துண்டித்தார்.

மறுநாள் மதியம் போன் போகவில்லை, போன் அணைந்திருந்தது, மாலையும் இரவும் அணைந்திருந்தது. மறுநாளும் போன் அணைந்திருந்தது. பேராசிரியர் ரஜினி டிசோடியாவைத் தொடர்புகொண்டேன். அவருக்கும் தெரியவில்லை. வீட்டுக்கு போனால் வீட்டில் பூட்டு. பேராசிரியர் ரஜினி அனுராகியைத் தொடர்புகொண்டேன். “தீதிக்கு முதுகுவலி அதிகமாகி இடுப்புக் கீழ் செயலிழந்துவிட்டது, செயின்ட் ஜார்ஜ் மருத்துவமனையில் மூன்றுநாள் முன் ஆய்வு மாணவர் சேர்த்திருக்கிறார், நேற்று முதுகுத்தண்டில் அறுவைச் சிகிச்சை செய்திருக்கிறார்கள், ஐசியுவில் இருப்பதால் யாரும் போய் பார்க்க முடியாது” என்றார்.

“காலை நான் போகிறேன் அனுராகி. மூடப்பட்ட அறைக்கு வெளியே நமது மூச்சுக்காற்றும் காலடி சத்தமும் நாம் அவருடன் இருக்கிறோம் என்று சொல்லும். நாம்தாம் அவரைப் பார்த்துக்கொள்ளனும்” என்றேன்.

இரவு போன் செய்து, “தீதி நிலமை ரொம்ப மோசம்; கோமாவுக்கு போய்விட்டார்” என்று அழுதார் அனுராகி.

நள்ளிரவில் ரஜினி தீதி நம்மைவிட்டு பிரிந்தார் என்ற செய்தி இரவை பனிபோல் உறைய வைத்தது. மார்ச் 30 விடியற்காலையில் நினைவுத்திரும்பாமலேயே, அறுபது வயதில் ரஜினி திலக் நம் மக்களுக்கான விடுதலைப் போராட்டத்தை எழுத்தை நிறுத்திக்கொண்டார். திடீர் சூறாவளியில் தலித் பெண் இலக்கியத்திற்கு நிழல் தந்த ஒற்றை பெருமரம் சாய்ந்து வெறுமை சூழ்ந்தது. இனி அதன் விதைகள் துளிர்க்க காலமெடுக்கும்.

உயிரற்ற உடல் முன்னறையில் கிடத்தப்பட்டிருந்தது. மகள், சகோதரி, சகோதரர்கள், நெருங்கிய உறவுகள், நெருங்கிய தோழிகளென ஒரு ஐம்பது பேர் மட்டுமே வந்திருந்தது அதிர்ச்சியளித்தது. “டெல்லியில் இறந்தவர் உடலை நாள் முழுதும் வீட்டில் வைக்கும் கலாச்சாரமில்லை. சில மணி நேரங்களில் அவரவர் குடும்பச் சடங்கை முடித்து அன்றே எடுத்துச் சென்றுவிடுவோம், அஞ்சலி செலுத்துவோர் நேரே சுடுகாட்டுக்கு வந்துவிடுவார்கள்” என்று அனுராகி சொன்னார்.

யமுனைக்கரையில் அமைந்த டெல்லியின் மிகப்பெரிய காஷ்மீரி கேட் சுடுகாட்டுக்கு பௌத்தக் கொடி போர்த்தி எடுத்துச்சென்றோம். (ராஜேந்திர சச்சார், குல்தீப் நய்யர் இறந்த போதும் லோதி கார்டன் சுடுக்காட்டில்தான் தோழர்களின் அஞ் சலிக்கு வைக்கப்பட்டு அஞ்சலி செலுத்தினோம்)

தோழர்கள் பலர் அங்கு காத்திருந்தார்கள். சடங்கு மேடையில் அவரது உடல் அஞ்சலிக்காக வைக்கப்பட்டது. நூற்றுக்கணக்கில் தோழர்கள் வரத்தொடங்கினார்கள். டி. ராஜா, பிருந்தா காரத் உட்பட ஏழெட்டு பெயர் தெரியாத எம்பிகள், டெல்லி எம்எல்ஏகள், ஊர்வசி புட்டாலியா உள்ளிட்ட பதிப்பாளர்கள், பத்திரிகையாளர்கள், மனிதவுரிமைச் செயற்பாட்டாளர்கள், தலைவர்கள், பேராசிரியர்கள், பௌத்தப் பிக்குகள், மாணவர்களென்று கண்ணீர் அஞ்சலி செலுத்தி விடைகொடுத்தனர்.

ரஜினி திலக் தீதி எனக்கு அறிமுகமாகிய ஆறுமாத காலத்தில், திடீரென்று தோன்றி மறையும் விடிவெள்ளி போல், உற்றுப் பார்க்கத் துவங்கும்போதே மறைந்து பேரதிர்ச்சியை கொடுத்தார். எனது பூமி எனது வானம் என்றவர் பூமியை தனது எழுத்துகளால் ஆளவிட்டுவிட்டு வானையாள கிளம்பிவிட்டார்.

எவ்வளவு பெரிய ஆளுமையாக பிரபலமாக இருந்தாலும் பொருளாதார பலமில்லாவிட்டால் யாரும் யாருடனுமில்லை என்ற நிஜம் சுட்டது. கடைசி காலத்தில் ஆத்மார்த்த உறவுகளின் துணையில்லாமல், உடல்நிலையில் கவனமின்றி, நோய்மை முற்றி தனிமையில் மரணிக்கும் அவலம் மிகக் கொடியது. ரஜினி திலக் மாதக்கணக்கில் கொடுந்துயருக்கு ஆளாகவில்லை என்பது மட்டுமே ஒரு ஆறுதல்.

ரஜினி திலக்குக்கு டெல்லி பல்கலைக்கழக இந்தித் துறையில்தான் முதல் அஞ்சலிக் கூட்டம் நடத்தப்பட்டது. டெல்லி பிரஸ் கிளப்பில், இந்தியா இன்டர்நேசனல் அரங்கில், எல்ஐசி ஊழியர் சங்கத்தில் எனத் தொடர்ந்து டெல்லி முழுதும் ஏழெட்டு அஞ் சலிக் கூட்டங்கள் நடத்தப்பட்டன. ரஜினி திலக்கின்



‘பெஸ்ட் ஆப் கர்வாசௌத்’ சிறுகதைத் தொகுப்பை ‘தலித்பெண்படைப்பாளிகள்’ அமைப்பு முன்னெடுத்து வெளியிட்டு ரஜினி திலக்கின் கனவுக்கு ஒரு மலர் சூட்டியது. அவரது சுயசரிதை இரண்டாம் பாகம் அச்சில் இருப்பதாய் ரஜினியின் தம்பி அசோக் பார்தி இந்த மார்ச் முதலாம் ஆண்டு அஞ்சலிக் கூட்டத்தின் சந்திப்பின் போது சொன்னார்.

இந்தியச் சமூகங்களில் பெண் தலைவர்கள், அரசியல்வாதிகள், செயற்பாட்டாளர்கள், படைப்பாளிகள், பொதுவெளியில் பிரபலமாக சாதி, வர்க்கம், குடும்பப் பின்னணி முதலியன பிரதானப் பங்காற்றுகின்றன. இப்பின்னணியிலிருந்து வரும் ஒட்டுச்செடிகள், மக்கள் பணியாற்றாமலேயே ஆணாதிக்கக் கட்டமைப்புகள் உருவாக்கிய நிறுவனங்கள், இயக்கங்கள், கட்சிகளின் தோளில் ஏறி அரசியல்வாதிகளாய், போராளியாய், படைப்பாளிகளாய் வரலாற்றில் உச்ச வெளிச்சமடைந்துவிடுகிறார்கள். மக்களோடு மக்களாய் தனித்து உருவாகி இந்த ஆணாதிக்க கட்டமைப்பின் புறக்கணிப்பு, அவமதிப்பென அனைத்து வலிகளையும் துயரங்களையும் துரோகங்களையும் சுமந்து, ஒடுக்கப்பட்ட மக்களின் விடுதலைக்காக உரிமைக்காக இயக்கம் கட்டும் களப்போராளிகள், படைப்பாளிகள் வரலாற்றில் திட்டமிட்டு மறைக்கப்படுகிறார்கள்.

‘தனியே ஓடினால் வேகமாய் இலக்கை அடையலாம். சேர்ந்து ஓடினால் லட்சியத்தை அடையலாம்’ என்பது ஆப்பிரிக்க முதுமொழி. தனிமனித இலக்கை அடைய பிழைப்புவாத அரசியல் செய்வோருக்கு மத்தியில், சமூக விடுதலையென்னும் லட்சியத்தை அடைய பயணித்தவர் ரஜினி திலக்.

பெண்களுக்கென இயங்கும் மிகப்பெரிய பதிப்பாளர்கள், மனிதவுரிமை பேசும் - விடுதலையரசியல் பேசும் பொதுவுடமைத் தத்துவவாதிகள் கடைப்பிடிக்கும் நுட்பமான சாதிய அரசியலால், வர்ணாசிரம அரசியலால் புறக்கணிக்கப்பட்ட மிகப்பெரிய ஆளுமையை களத்தில்தான் கண்டெடுத்தேன். பாசிச அரசியலுக்கு எதிராக உருவாக்கப்பட்ட மாற்று இயக்க மக்கள் அரசியலுக்குள் செயல்படும் நுட்பமான சாதிவெறியை இனியும் பேசாமல் மௌனிப்பதும் காலம் கடத்துவதும் சாதிய பாசிசத்துக்கு துணைபோகும் அரசியல்.

*“கம்யூனிஸ்ட் கணவரின் மனமும் செயலும் பொது மனிதர்களைவிடவும் வேறுபட்டதாக இருக்கவில்லை. ஒவ்வொரு வகையிலும் அடக்குமுறையும் மற்றும் ஆக்கிரமிப்பும்தான் இருந்தது. எந்த வகையிலும் சமத்துவத்தை வழங்க விரும்புவதில்லை. மாறாக, ஒரு அறிவார்ந்த நண்பராக இருந்த இவர் வார்த்தைகளாலும் குதர்க்க சொற்களின் அம்புகளாலும் தத்துவம் என்ற போர்வையில் என்னை நிராயுதபாணியாக்கவே முயன்றார். கணவர் ஒரு பழைமைவாதியாக இருந்திருந்தால், நீ என்னுடையவள் என்று சொல்லியிருப்பார். என்னைத் தவிர வேறு யாரையும் கற்பனை செய்ய வேண்டாம். அவருடைய தத்துவமும் புரிதலும் அவ்வளவுதான் என்பதால் என்னால் அதை ஏற்றுக்கொள்ள முடிந்திருக்கும். அவருக்கு புரிந்துகொள்ளுவதற்கென எல்லைகள் இருக்கின்றன. ஆனால், முற்போக்கான ஒரு தோழர் தான் ஒரு அறிஞர் என்று சொல்லிக்கொள்வார். உன்னைவிட எனக்கு அதிகம் தெரியும். நான் ஒரு கொள்கையில் உறுதியுடன் இருக்கிறேன். நீ எனக்கும் எனது கொள்கையின் மேலும் பிடிப்புடன் இருப்பது அவசியம். இல்லையெனில் என் தண்டவாளம் தனியாகிவிடும். பிரிந்து இரு. பகலுக்கு இரவு போலவும் இரவுக்குப் பகல் போலவும் இரு என்று சொல்லச் சொல்ல, களைத்துப் போய்விட்டேன். உடைந்து பரவிக் கொண்டிருந்தேன்.*

*அவர் அடிக்கடி பெண்ணியம் ஒரு மாயை, அம்பேத்கரியம் ஒரு மோசடி என்று கூறுவார். புத்தம் ஒரு தப்பித்தல் கொள்கை. இவை மூன்றுமே புரட்சிக்குத் தடையாக இருப்பவை. தனிமனித சுதந்திரத்தையும் பெண்ணின்இருப்பையும்நசுக்குவதுபுரட்சிக்கு ஆபத்தானது இல்லையா? தத்துவத்தின் பெயரில் ஒளி கூட்டுவது புரட்சிக்கு ஆபத்தானது இல்லையா? குடும்பங்களை நிலப்பிரபுத்துவ பின்னணியில் வைத்திருப்பது புரட்சிக்கு ஆபத்தானது இல்லையா?” - ரஜினி திலக் (பெஸ்ட் ஆப் கர்வாசௌத், தமிழில்: நாணற்காடன்)*

**மாலதி மைத்ரி <anangufeministpublication@gmail.com>**

# வினோபா மகத்தான சாதனை

பாவண்ணன்

25.03.1916 அன்று கல்லூரி இடைநிலைப் படிப்பின் இறுதித் தேர்வை எழுதுவதற்காக பம்பாய் செல்லும் ரயிலில் பயணம் செய்தார் ஓர் இளைஞர். சிறுவயதுமுதல் காசியையும் இமயத்தையும் காணும் கனவுகளை மனத்தில் தேக்கி வைத்திருந்தவர் அவர். பயணத்தின்போது அக்கனவுகள் மீண்டும் துளிர்த்தெழ, அந்த உந்துதலில் சட்டென சூரத் நிலையத்தில் இறங்கி காசிக்குச் செல்லும் ரயிலில் ஏறிவிட்டார். அங்கு தங்கி சமஸ்கிருதம் பயிலத் தொடங்கினார். நேரம் கிடைக்கும் போதெல்லாம் காசிக்கு வரும் அரசியல் போராட்ட வீரர்களைச் சந்தித்து உரையாடினார்.

ஒருநாள் அவர் தங்கியிருந்த இடத்தில் தற்செயலாக கைக்குக் கிடைத்த 'ஆசிரம பத்ரிகா' என்னும் பழைய பத்திரிகையை எடுத்துப் புரட்டினார். அதில், பிப்ரவரி மாதம் இந்துப் பல்கலைக்கழக அடிக்கல் நாட்டுவிழாவில் கலந்துகொண்டு காந்தியடிகள் பேசிய உரையின் சுருக்கம் வெளியாகியிருந்தது.

ஆங்கிலேய ஆட்சியாளர்களின் ஆடம்பரத்தை யும் மக்களை அடக்கியாள்வதற்காக அவர்கள் கையாளும் வன்முறையையும் சுட்டிக்காட்டி காந்தியடிகள் உரையாற்றியிருந்தார். தீவிரவாதிகளின் நடவடிக்கைகளையும் அவர் உரை விமர்சித்திருந்தது. ஆங்கிலேயர் ஆட்சியின் கீழ் வாழ விருப்பமற்றவர்கள், அவர்களை நேருக்குநேர் பார்த்து, "ஆங்கிலேயர்களே, எங்கள் நாட்டைவிட்டு வெளியேறுங்கள் என உரைக்கும் மனத்துணிவைக் கொண்டிருக்க வேண்டும். அதற்காக அவர்கள் சிறைத் தண்டனை விதித்தால், அதை ஏற்றுக்கொள்ளும் நெஞ் சுரமும் வேண்டும். அதைவிடுத்து வெடிகுண்டு வீசுவது, கொலை செய்வது, கொள்ளையடிப்பது ஆகியவற்றால் ஒருபயனும் விளையாது. அனைவரும் ஒன்று திரண்டு அகிம்சை வழியில் ஆட்சியாளர்களை எதிர்த்து நிற்பதே சிறந்த வழியாகும்" என வெளியாகி யிருந்த பத்திரிகைக் குறிப்பைப் படித்து உற்சாகம் கொண்டார் அந்த இளைஞர்.



அவர் பெயர் வினாயக் நரஹரி பாவே. பிற்காலத்தில் வினோபா என்று அழைக்கப்பட்டவர்.

காந்தியடிகளுக்கு அன்றே வினோபா ஒரு கடிதம் எழுதினார். பத்திரிகையில் படித்த செய்தியைப் பற்றி குறிப்பிட்டுவிட்டு, அகிம்சை பற்றியும் வாழ்க்கை பற்றியும் தன் மனத்தில் எழுந்த சில கேள்விகளை முன்வைத்து விளக்கங்களை வேண்டினார். காந்தியடிகளிடமிருந்து அவருக்கு உடனே பதில் வந்தது. காந்தி எழுதியிருந்த விளக்கங்களை ஒட்டி மீண்டும் அவர் மனத்தில் கேள்விகள் எழ, காந்தியடிகளுக்கு அடுத்ததொரு கடிதத்தை எழுதி அனுப்பினார், வினோபா. அதற்கும் காந்தியடிகளிடமிருந்து பதில் வந்தது. வினோபா அடுத்ததொரு கேள்விப் பட்டியலை அனுப்பியதுமே கடிதத்திலேயே விளக்கம் தருவது சிரமமென்றும், அகமதாபாத்தில் உள்ள கோச்ரப் ஆசிரமத்துக்கு வந்து சந்திக்கும்படியும் எழுதிவிட்டு, சந்திக்க வேண்டிய நாள், நேரம் அனைத்தையும் தெரி வித்திருந்தார், காந்தி.

குறித்த நேரத்தில் ஆசிரமத்துக்குச் சென்று காந்தியடிகளைச் சந்தித்தார் வினோபா. ஆசிரமத்தின் கொள்கைகளையும் குறிக்கோள்களையும் முழுமையாக ஏற்றுக்கொண்டார். அது அவர் வாழ்வின் போக்கையே திசைமாற்றியது.

அன்றுவரை ஆசிரமத்தில் கழிப்பறைகளைத் தூய்மையாக்கும் பொருட்டு தனிப்பட்ட துப்புரவுப் பணியாளர் இருந்தார். அவர் வெளியிலிருந்து வந்து மலத்தை வாளியில் சுமந்து சென்று குழியில் கொட்டிவிட்டு தூய்மை செய்துவிட்டுச் செல்வது வழக்கம். ஒருநாள் அவர் வேலைக்கு வரவில்லை. அவருடைய மகன் வந்திருந்தார். அவரால் மலம் நிரம்பிய வாளியைத் தூக்கிக்கொண்டு நடக்க முடியவில்லை. அதைப் பார்த்த வினோபா ஓடோடிச் சென்று வாளியைச் சுமந்து சென்று உதவினார். அடுத்தநாள் கழிவறைகளைத் தூய்மை செய்வதிலும் அச்சிறுவனுக்கு உதவிகள் செய்தார்.

அதைக் கண்ணுற்ற ஆசிரமவாசிகள் வினோபாவை அழைத்து, அது அவர் செய்யவேண்டிய வேலையல்ல என்று தடுத்தார்கள். ஆனாலும், அவர்கள் பேச்சைப் பொருட்படுத்தாமல் தினமும் அந்த வேலைகளைச் செய்தார் வினோபா.

அச்செய்தி காந்தியடிகளின் கவனத்துக்குச் சென்றது. உடனே அவர் அனைவரையும் அழைத்து, "மலமள்ளுவதும் கழிப்பறைகளைத் தூய்மை செய்வதும் புனிதமான செயல்கள். இனிமேல் ஆசிரமத்துக்கு தனிப்பணியாளர் அவசியமில்லை. ஆசிரமத்தில் உள்ள அனைவரும் ஒரு நாளைக்கு ஒருவரென முறைவைத்து கழிப்பறை வேலையைச் செய்யவேண்டும். இதற்கு உடன்படாதவர்கள் இந்தக் கணமே ஆசிரமத்தைவிட்டு வெளியேறலாம்" என்று அறிவித்தார்.

அந்த அறிவிப்பை விரும்பாத காந்தியடிகளின் சகோதரி உட்பட பலரும் ஆசிரமத்தைவிட்டு அன்றே வெளியேறினார்கள். "எந்த வேலையும் உயர்வோ தாழ்வோ இல்லை. மனிதர்களிடையிலும் பேதமெதுவும் இல்லை. அனைவரும் ஒன்றே" என்று அறிவித்தார் காந்தியடிகள். புதிய விதியொன்று ஆசிரம விதிப் பட்டியலில் ஒன்றென மாற ஏதோ ஒருவகையில் வினோபா காரணமாக இருந்தார்.

இயல்பாகவே அறிவாற்றல் மிக்கவராக இருந்தார் வினோபா. கற்பதும் கற்பிப்பதும் அவருக்கு மிகவும் பிடித்தமான செயல்கள். நேரத்தை ஒருபொருட்டாகக் கருதாமல் ஓய்வின்றி உழைக்கக்கூடியவர். காய்கறி நறுக்குவது, தானியங்களைத் தூய்மை செய்வது, பாத்திரங்களைத் தேய்த்துக் கழுவுவது என எந்த வேலை செய்தாலும், ஏதாவது ஒரு விஷயத்தைப் பற்றி அருகில் இருப்பவர்களுக்குக் கற்பித்தபடியே செய்வார். அவர் பன்முக ஆற்றல் உள்ளவர். அவர் இருக்குமிடத்தில் பாடமும் நடக்கும், வேலையும் நடக்குமென்று காந்தியடிகள் அடிக்கடி கூறுவதுண்டு.

இடைவிடாத வேலைச் சுமைகளினாலும் பல்வேறு விரதங்களாலும் வினோபா மெலிந்து உடல்நலம் குன்றினார். உடனே காந்தியடிகள் அவரை மருத்துவம் பார்த்துக்கொள்ளவும் ஓய்வெடுக்கவும் 'வை' என்னும் ஊருக்கு அனுப்பிவைத்தார். ஏறத்தாழ ஓராண்டு காலம் அங்கு தங்கியிருந்தார் வினோபா. அந்த ஓய்வுக்காலத்தைப் பயன்படுத்தி வினோபா முழுமையாக சமஸ்கிருதம் கற்று தேர்ச்சி பெற்றார்.

ஆசிரம வாழ்வைப் போலவே சிறை வாழ்க்கையையும் இன்முகத்துடன் எதிர்கொண்டவர் வினோபா. 1923ஆம் ஆண்டில் நாக்பூரில் கொடியேற்றி வைத்துவிட்டு தேச விடுதலையைப் பற்றியும் ஆங்கிலேயர் ஆட்சியால் உருவான அவலங்களைப் பற்றியும் பொதுமக்களிடையே உரையாற்றினார் வினோபா. அகிம்சை வழியை ஏற்று விடுதலைப் போராட்டத்தை ஏற்றுக்கொள்ளும்படி மக்களைக் கேட்டுக்கொண்டார். அப்போது காவல்துறையினரால் அவர் கைது செய்யப்பட்டு சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். விசாரணையைத் தொடர்ந்து அவருக்கு நான்கு மாத சிறைத்தண்டனை விதிக்கப்பட்டது. இது அவருடைய முதல் சிறைவாசம். இதைத் தொடர்ந்து 1932ஆம் ஆண்டு கைது செய்யப்பட்டு ஆறு மாத காலம் சிறைத் தண்டனை பெற்றார். 1941ஆம் ஆண்டில் கைதானபோது ஓராண்டு காலம் தண்டனை கிடைத்தது. 'வெள்ளையனே வெளியேறு' போராட்டத்தின்போது அவர் சிறையில் மூன்றாண்டுக் காலம் கழிக்க வேண்டியிருந்தது.

ஒருமுறை சிறையில் இருக்கும்போது வினோபா தன் தாயை நினைத்துக்கொண்டார். அதைத் தொடர்ந்து, பல சமயங்களில் அவருக்கு அருகில் அமர்ந்து கீதை வரிகளைப் படித்துக் காட்டியதும், அவற்றின் பொருளை பல நடைமுறைக் கதைகளோடு இணைத்து ஒப்பிட்டு புரியும்படி விரிவுபடுத்திச் சொன்னதும் நினைவுக்கு வந்தது. அப்படி சொல்லிக் கொண்டிருக்கும்போது ஒருநாள், "நம் மண்ணில் வாழும் சாதாரண மக்களுக்கும் புரியும் வகையில் எளிய மராத்தியில் கீதைக்கு நீ ஓர் உரை எழுதுவாயா?" என்று கேட்டதும் நினைவுக்கு வந்தது.

அம்மாவின் விருப்பத்தை நிறைவேற்ற சிறைவாசமே பொருத்தமான இடம் என உணர்ந்து உடனடியாக செயலில் இறங்கி எழுதி முடித்தார். அது மட்டுமன்றி, சிறைச்சாலையில் அடைக்கப்பட்டிருக்கும் மற்ற கைதிகளும் தெரிந்துகொள்ளும் வகையில் விரிவான எடுத்துக்காட்டுகளுடன் கீதையைப் பற்றிய உரைகளை நிகழ்த்தியுள்ளார்.

கீதையைப் பற்றிய தொடர்ந்த பேச்சுகளால், அவர் நிகழ்த்திய உரைகள் அனைத்தும் மனப்பாடமாகிவிட்டது. கிட்டத்தட்ட ஒரு வாய்ப்பாட்டுப் புத்தகம் போல வினோபாவுக்கு கீதை ஆகிவிட்டது. கீதை என்பது நடைமுறைக்குப் பொருந்தாத ஏதோ தத்துவங்களைக் கொண்ட நூல் என்று நினைத்திருந்தவர்களுக்குக்கூட, அது எந்த அளவுக்கு, எப்படியெல்லாம் தினசரி வாழ்க்கையை வடிவமைத்துக்கொள்ள ஓர் உற்ற கருவியாக உதவுகிறது என உணரவைத்தது.

மேலும், சுயராஜ்ஜியம் பற்றிய முக்கியமானதொரு நூலையும் வினோபா எழுதினார். நாமதேவர், ஞானேஸ்வரர், ஏகநாதர் போன்ற ஞானிகள் பாடிய வழிபாட்டுப் பாடல்களையெல்லாம் தொகுக்கும் முயற்சிகளில் ஈடுபட்டு வெற்றியடைந்தார்.

சிறைச்சாலையில் சாதாரணக் கைதிகளோடு ஒருவராக அடைத்து வைக்கப்படுவதையே வினோபா எப்போதும் விரும்பினார். எந்த விதத்திலும் தான் மற்றவர்களைவிட மேலானவன் கிடையாது என்பதை உணர்ந்துகொள்ள சிறைவாசம் சிறந்ததொரு வாய்ப்பு என்பதே அவர் எண்ணம்.

சிறை வாழ்க்கையே ஆசிரம வாழ்க்கைக்கு சிறந்ததொரு எடுத்துக்காட்டு. ஓர் உடை, ஒரு தட்டு, ஒரு தம்ளர், ஒரு பானை என எல்லாமே தேவைக்கு மட்டுமே அங்கு இருந்தன. குறித்த நேரத்தில் உறங்கச்செல்வது, குறித்த நேரத்தில் எழுந்திருப்பது, குளிப்பது, உண்பது, உழைப்பது என ஒவ்வொரு செயலிலும் நேரம் தவறாமை பின்பற்றப்படுகிறது. ஒவ்வொரு நாளும் ஒரே மாதிரியான சுவையற்ற உணவு ஆழ்மன விருப்பத்திலிருந்து விடுபட்டு நிற்க உதவியாக இருக்கிறது. சிறைச்சாலையே உண்மையான ஆசிரமம் என்று குறிப்பிட்டு தனக்கு நேர்ந்த துன்பங்களையெல்லாம் இன்பமாக மாற்றிக்கொண்டார் வினோபா. எந்தச் செயலைச் செய்தாலும், அதில் நம் ஆழத்துக்குள் அமைந்திருக்கும் தெய்வத்தன்மையை வெளிப்படுத்தமுடியும் என்னும் உறுதியான நம்பிக்கையோடு வாழ்ந்தார்.

ஆசிரமத்தில் தங்கியிருப்பவர்களின் மன நிலையைப் பண்படுத்தும் விதமாக, ஓய்வு நேரத்தில் ஆசிரமத்துக்கு வெளியே குடிசைப் பகுதிகளில் நோய்வாய்ப்பட்டு வாடும் மக்களைச் சந்தித்து பணிவிடை செய்யவேண்டுமென்ற திட்டத்தை முன்வைத்தார் காந்தியடிகள். செவிலியர்போல உடனிருந்து நோய் முற்றிலும் நீங்கி குணமடையும் வரை சேவை செய்யவேண்டுமென்று



காந்தியடிகளுடன்

தெரிவித்தார். வினோபா உடனடியாக இத்திட்டத்தை ஏற்றுக்கொண்டு செயல்படுத்தத் தொடங்கிவிட்டார். இதனால், குடிசைவாசிகள் மருத்துவத்துக்காகச் செய்யும் செலவு பெருமளவில் மிச்சமானது.

இப்பணியை நாடு முழுதும் பரவலாக்கும் வகையில் ஒரு நீண்ட பயணத்தைத் திட்டமிட்டு செயல்படுத்தும்படி வினோபாவிடம் கேட்டுக்கொண்டார் காந்தியடிகள். அவர் சொற்களுக்குக் கட்டுப்பட்டு உடனடியாக ஒரு சுற்றுப் பயணத்தை வகுத்துக்கொண்டு செயல்படத் தொடங்கினார் வினோபா.

சின்னச் சின்ன கிராமங்களுக்கெல்லாம் சென்று ஆதரவற்றவர்களுக்குச் சேவை செய்தார். இந்தத் திட்டம் முழுமை பெறும் நேரத்தில் 30.01.1948 அன்று காந்தியடிகள் சுட்டுக் கொல்லப்பட்டார்.

காந்தி மறைவால் வினோபா அதிர்ச்சியில் உறைந்துவிட்டார். எந்தத் திசையில் செல்வதென்னும் தெளிவைப் பெறமுடியாமல் குழம்பித் தவித்தார். மெல்ல மெல்ல அவராகவே அந்தத் துக்கத்திலிருந்து மீண்டார். காந்தியடிகள் விட்டுச் சென்ற பணிகளில் தொடர்வதையே தன் தலையாய கடமையென நினைத்துச் செயல்படத் தொடங்கினார். காந்தியடிகள் கனவு கண்ட இந்தியாவை உருவாக்க அல்லும்பகலும் பாடுபடுவதையே தன் வாழ்நாள் இலக்காக வகுத்துக்கொண்டார்.

காந்தியடிகளின் சாம்பலைத் தாம் நதியில் கரைக்கும் சடங்கைச் செய்துகொண்டிருந்த சமயத்தில் வினோபாவின் உடல் ஒருகணம் சிலிர்த்தடங்கியது. அக்கணத்தில் தாம் புதிதாகப் பிறந்து வந்தாக நினைத்துக்கொண்டார் வினோபா. தம் எஞ்சிய வாழ்நாள் முழுதும் மக்களுக்குச் சேவையாற்றுவதில் மட்டுமே கழிக்கவேண்டும் என முடிவெடுத்தார்.

சுதந்திரம் பெற்ற இந்தியாவில் நமது ஆட்சிமுறை கிராமங்களை மையமாகக் கொண்டதாக இருக்க வேண்டுமென விரும்பினார் வினோபா. அரசியலும் ஆன்மிகமும் சரியான விகிதத்தில் ஒன்றிணைந்து செயல்பட்டால் மட்டுமே ஆட்சியை நல்லவிதமாக நடத்தமுடியும் என்பது அவர் நம்பிக்கை.

ஏதேனும் ஒன்றை ஏற்று ஒன்றைப் புறக்கணித்தாலும் நல்லாட்சி செய்வது சாத்தியமற்றுப் போய்விடும். போட்டிகள் மிகுந்த இன்றைய சமுதாயம் எதிர்கொள்ள வேண்டிய நெருக்கடிகளுக்கு அளவே இல்லை. இரக்கம், ஒத்துழைப்பு, தன்னம்பிக்கை, கூட்டுறவு மனப்பான்மை ஆகியவற்றின் மீது நம்பிக்கை இருந்தால் மட்டுமே அனைத்துவிதமான நெருக்கடிகளையும் எதிர்கொண்டு வெற்றி பெறமுடியும்.

ஒருவர் மீது ஒருவர் காட்டும் பரிவின் அடிப்படையில் சர்வோதயம் என்னும் கோட்பாட்டை உருவாக்கினார். 'சர்வ' என்னும் சொல்லுக்கு அனைவருக்கும் என்று பொருள். 'உதயம்' என்னும் சொல்லுக்கு விடியல் என்று பொருள். சர்வோதயம் என்பது அனைவருக்குமான விடியல். அனைவரும் இன்பமுடன் கூடி வாழ வழியுரைக்கும் தத்துவம்.

இன்னும் சில ஆண்டுகளில் இந்தியாவுக்கு விடுதலை கிடைத்துவிடும் என்பது உறுதியாகப் புலப்பட்ட நிலையில் இந்தியாவில் எப்படிப்பட்ட ஆட்சி நிலவவேண்டும் என்பதை ஒட்டி மாபெரும் மக்கள் தொண்டரான வினோபாவின் நெஞ்சில் ஒரு கொள்கைத்திட்டம் இருந்தது. அதை அவர் மக்கள் கூட்டங்கள் பலவற்றில் முன்வைத்திருந்தார். உண்மையிலேயே அனைவருக்கும் விடியலைத் தரும் மகத்தானதொரு திட்டம் அது. எப்படிப்பட்ட இலட்சியக் கனவுகளுடன் மாமனிதர்கள் நம்மிடையே வாழ்ந்து மறைந்திருக்கிறார்கள் என்பதை அறிந்துகொள்வதற்காகவாவது அத்திட்டங்களின் அம்சங்களை நாம் அறிந்துகொள்ளவேண்டியது அவசியம்.

- உலகம் தழுவிய சகோதரத்துவம்.
- நாட்டில் உள்ள அனைவரையும் ஒருங்கிணைத்து, நாட்டுக்கு நன்மை பயக்கும் திட்டங்களுக்காக கூட்டுறவு முறையில் இயங்கவைத்தல்.
- உருவாக்கப்படும் ஒவ்வொரு திட்டத்தை ஒட்டியும் திறமைசாலிகள் பங்கெடுத்து வெற்றியைத் தேடித் தருதல். மற்றவர்கள் தமக்குகந்த வகையில் சிறிதளவாவது பங்காற்றுதல்.
- சமுதாயத்தில் ஒவ்வொருவரும் சமமான வகையில் முன்னேற்றம் அடைதல்.
- ஆட்சி அதிகாரத்தை முடிந்த அளவுக்குப் பரவலாக்குதல்.
- மிகக்குறைந்த அளவே நிர்வாகத் தலையீடு
- எளிமையான, சிக்கலற்ற நிர்வாக அமைப்பு
- மிகவும் குறைந்த அளவு செலவு செய்தல்
- தேசத்தின் பாதுகாப்புக்காக, போதிய படைபலம்
- நாட்டுமக்கள் அனைவரும் கல்வியில் தேர்ச்சி

பெறும் வகையில் செயல்திட்டங்களை வகுத்தளித்தல். அரசு கூறுவதையே கற்பிக்கவேண்டும் என்று ஆணையிட்டு கற்பிக்கும் முறை கூடாது.

1951ஆம் ஆண்டில் ஐதராபாத்திலிருந்து சிறிது தொலைவிலிருக்கும் சிவரம்பள்ளி என்னும் சிற்றூரில் நிகழ்ந்த மூன்றாவது சர்வோதய மாநாட்டில் பங்கேற்பதற்காக நாக்பூருக்கு அருகிலிருந்த தன் ஆசிரமத்திலிருந்து புறப்பட்டார் வினோபா. நாக்பூரிலிருந்து ஐதராபாத் ஏறத்தாழ முன்னூறு மைல் தொலைவில் இருந்தது. இத்தொலைவை நடந்தே கடக்க முடிவெடுத்தார் அவர். தங்க நேர்ந்த ஒவ்வொரு ஊரிலும் காந்தியடிகளின் அகிம்சைத் தத்துவத்தின் முக்கியத்துவத்தை பொதுமக்களுக்கு எடுத்துரைக்க நடைப்பயணத்தை ஒரு வாய்ப்பாக பயன்படுத்திக்கொள்ளலாம் என அவர் கருதினார். நினைத்தவாறே ஒவ்வொரு ஊரிலும் மக்களிடையில் உரையாற்றியது அவருக்கு மிகவும் நிறைவளித்தது. அதைத் தொடர்ந்து சிவரம்பள்ளியிலும் மாநாடு சிறப்புற நடந்துமுடிந்தது.

ஆசிரமத்துக்குத் திரும்ப தொண்டர்கள் அனைவரும் தயாராகிக் கொண்டிருந்த வேளையில் அந்த வழிப்பயணத்தையும் நடைப்பயணமாகவே வைத்துக்கொள்ளலாம் என அவர் அறிவித்தார். தொண்டர்கள் அவருடைய திட்டத்துக்கு உடன்பட்டனர். ஒரு மாறுதலுக்காக இந்தப் பயணத்தை விவசாயிகள் போராட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்த தெலுங்கானா கிராமங்கள் வழியாகச் செல்லலாமென முடிவெடுத்தார் அவர். கம்யூனிஸ்டுகள் அடிக்கடி தாக்குதல் நிகழ்த்தும் பகுதி என்பதால், கலவரத்துக்கு அஞ்சி அப்பயணத்தைத் தடுக்க பலர் நினைத்தார்கள். ஆயினும் விவசாயிகளை நேருக்குநேர் சந்தித்து அவர்களுடைய பிரச்சினையைக் கேட்டறிவதற்கும் முடிந்த அளவு அவர்களுக்கு உதவுவதற்கும் இப்பயணத்தைப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்று தெரிவித்தார் வினோபா.

பயணம் தொடங்கிய மூன்றாவது நாள். கலவரப் பகுதியாக இருந்த போச்சம்பள்ளி கிராமத்தில் வினோபாவும் தொண்டர்களும் தங்குவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. உண்மையில் ஒருகாலத்தில் நல்ல விளைச்சலை வழங்கிய நிலப்பகுதியாகவே அக்கிராமம் இருந்தது. முறையான நீர்ப்பாசன வசதி இல்லாததாலும் நிலத்தடி நீர்ச்சத்து குறைந்திருந்ததாலும் விவசாயத்துக்குப் பொருத்தமற்ற வகையில் நிலம் வெடித்து தரிசாக மாறிவிட்டது. சாராயத்துக்குப் பேர்போன இடம் என்பதால், மக்கள் எளிதில் சாராயத்துக்கு அடிமையாக மாறிவிட்டனர். வன்முறையின் மூலம் சாராயக்கடைகளை அகற்றி, மது அடிமைகளாக மாறியிருந்த மக்களை நல்வழிப்படுத்தி விவசாயத்தில் ஈடுபடுத்த முயற்சி செய்தனர் கம்யூனிஸ்டுகள். விவசாயத்துக்குத் தேவையான நிலங்களை நிலக்கிழார்களிடமிருந்து கையகப்படுத்தி கிராம மக்களுக்கு அளித்தனர். அதனால் அடிக்கடி கலவரங்கள் நிகழ்ந்தன.

போச்சம்பள்ளியில் வசிப்பவர்களிடம் பேசிப்பேசி பிரச்சினையின் தன்மையை முழுமையாகப் புரிந்துகொண்டார் வினோபா. ஏறத்தாழ எழுநூறு குடும்பங்கள் அக்கிராமத்தில் வசித்து வந்தன. அவர்களில் மூன்றில் இருபங்கினர் நிலமற்ற விவசாயிகள். அங்கிருந்த தாழ்த்தப்பட்டோர் குடியிருப்பில் தங்கி கிராம மக்கள், கம்யூனிஸ்டுகள், நிலக்கிழார்கள் ஆகிய மூன்று தரப்பினரையும் வரவழைத்து உரையாட முற்பட்டார் வினோபா. ஆனால், வினோபா சொல்வதை கம்யூனிஸ்டு தரப்பினர் காதுகொடுத்துக் கேட்கவே தயாராக இல்லை. தாம் செய்வதும் வினோபா செய்ய நினைப்பதும் ஒன்றே என வாதாடினர். முடிவு ஒன்றே என்றாலும் வழிமுறை வேறுவேறு என்று சுட்டிக்காட்டினார் வினோபா. வன்முறையை விதைத்தால் வன்முறையையே அறுவடை செய்யவேண்டிய சூழலே எதிர்காலத்தில் உருவாகும் என்றும் எடுத்துரைத்தார்.

குடிப்பழக்கம் எவ்வளவு கொடுமையானது என்பதை கிராமத்தினருக்கு பொறுமையாக எடுத்துரைத்தார் வினோபா. அவர்கள் அப்பழக்கத்தை விட்டுவிடுவதாக வாக்களித்தார்கள். தொடர்ந்து, "குறைந்தபட்சமாக எண்பது ஏக்கர் நிலம் கிடைத்தால் போதும், இங்கிருக்கும் எங்கள் குடும்பங்கள் எப்படியோ பிழைத்துக்கொள்ளும். அரசாங்கத்திடம் பேசி வாங்கித் தருவீர்களா?" என்று கேட்டார்கள். மேலும், "நிலம் கிடைத்தால் இங்கு வம்புக்கும் இடமிருக்காது, வன்முறைக்கும் இடமிருக்காது" என்றும் சொன்னார்கள்.

அவர்களுக்கு என்ன பதில் சொல்வது என்று புரியாமல் தத்தளித்தார் வினோபா. "அரசாங்கத்திடம் கேட்டால் நிச்சயம் கொடுக்கும், கொடுக்கவேண்டும். அந்த முயற்சியில் நாம் இறங்கலாம். ஆனால், அதெல்லாம் நடந்து முடிய நீண்ட காலம் தேவைப்படலாம். ஆனால், இன்றைக்கு, இக்கணத்தில் கருணையுடன் உங்களுக்கு உதவ, இந்த ஊரில் யாரும் முன்வரமாட்டார்களா?" என்று நா தழுதழுக்க அவர் கேட்டபடி அனைவரையும் பார்த்தார்.

எதிர்பாராத கணமொன்றில் கூட்டத்திலிருந்து ஒருவர் எழுந்து நின்றார். வினோபாவைப் பார்த்து வணங்கியபடி, "நான் ராமச்சந்திர ரெட்டி. என்னிடம் நூறு ஏக்கர் நிலமுள்ளது. நான் அதை ஹரிஜனர்களுக்கு தானமாக அளிக்கிறேன்" என்று சொன்னார். வினோபா மனம் நெகிழ்ந்து ஒருமுறை பார்த்தார். ஒருகணம் அச்சொற்களை வினோபாவால் நம்பவும் முடியவில்லை. நம்பாமல் இருக்கவும் முடியவில்லை. அவர் சொன்னதை மறுபடியும் கூடியிருப்போர் அனைவருடைய நெஞ்சிலும் பதியும்வண்ணம் சொல்லும்படி கேட்டுக்கொண்டார்.

ராமச்சந்திர ரெட்டியின் அறிவிப்பு திட்டமிட்ட ஒன்றோ அல்லது பேசிவைத்த முடிவோ அல்ல. தற்செயலாக அது நிகழ்ந்துவிட்டது. தானம் வழங்கும் ஒரு புதிய வழிமுறை இந்தியாவிலேயே முதன்முறையாக அக்கணத்தில் பிறந்தது. மனமாற்றத்தைத் தூண்டும் வகையில் ஒருவரோடு உரையாடுவதன் வழியாக, இந்தியா முழுதும் நிலவிவரும் நிலப்பிரச்சினையைத் தீர்க்கமுடியும் என்னும் மன உறுதி வினோபாவின் நெஞ்சில் உருவாக இந்த நிகழ்ச்சி காரணமாக


ஜவஹர்லால் நேருவுடன்

அமைந்துவிட்டது. அவருடைய 'பூதான (பூமிதான) இயக்கம்' இப்படித்தான் தொடங்கியது.

நிலத்துக்குச் சொந்தக்காரர்களாக இருப்பவர்களிடமிருந்து நிலமற்ற ஏழைகளுக்கு நிலத்தை தானமாகப் பெறுவது சாத்தியம் என்பதை உணர்ந்துகொண்டதும் ஆசிரமத்துக்குத் திரும்பும் திட்டத்தை மாற்றி தெலுங்கானா பகுதியிலேயே ஏறத்தாழ ஏழு வாரங்களில் இருநூறு கிராமங்கள் வழியாக நடைப்பயணம் செய்தார், வினோபா. அவருடைய பயணம் தொடரமுடியாதபடி நினைத்தே பார்க்கமுடியாத அளவுக்கு வழியெங்கும் பல தொல்லைகள் ஏற்பட்டன. மனிதர்களால் ஏற்பட்ட தொல்லைகளே மிகுதி. அனைத்தையும் தம் அன்பாலும் அமைதியாலும் கடந்துசென்றார் வினோபா.

ஏழு வாரங்கள் முடிவடையும் தருணத்தில் ஏறத்தாழ பன்னிரண்டாயிரம் ஏக்கர் நிலம் தானமாகப் பெறப்பட்டு நிலமற்ற தாழ்த்தப்பட்ட பிரிவைச் சேர்ந்த விவசாயிகளுக்கு வழங்கப்பட்டிருந்தது. அதன் முடிவில் பூதான இயக்கத்தை மற்ற மாநிலங்களில் பரப்புவதற்காக வினோபா புறப்பட்டுச் சென்றார். ஆயினும் வினோபா விடுத்த பூதான கோரிக்கையை முன்வைத்து ஆந்திரம் முழுக்க அலைந்து திரிந்த பூதான இயக்கத் தொண்டர்கள், ஏறத்தாழ ஒரு லட்சம் ஏக்கர் நிலத்தை தானமாகப் பெற்று நிலமற்ற ஏழைகளுக்கு வழங்கினார்கள்.

பேராசையே அடக்குமுறைக்கு அடிப்படையான காரணம் என நினைத்தார் வினோபா. ஒருவர் தனக்குள் ஊற்றெடுக்கும் பேராசையையும் உடைமையுணர்வையும் வெற்றிகொள்ளும் முனைப்பு கொண்டிருந்தால், மனிதர்களிடையே நிலவிவரும் பிரிவுகளின் பொருளின்மையையும் சுரண்டலுக்கான காரணத்தையும் எளிதாகப் புரிந்துகொள்ள முடியும். அக்கணத்தில் மாபெரும் கருணையின் ஊற்றே அவர்களுடைய நெஞ்சிலிருந்து பொங்கியெழும்.

அடைபட்டிருக்கும் கருணையின் ஊற்றுக் கண்ணைத் திறப்பதையே தன் முதன்மை இலக்காகக் கொண்டிருந்தார் வினோபா. ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களை தானமாகப் பெற்று நிலமற்றவர்களுக்கு அக்கணமே வழங்கிவிடுவதை பழக்கமாகக் கொண்டிருந்தார். அவர் கடந்து செல்லும் கிராமங்கள் தோறும் தானமாகக் கிட்டும் நிலங்களின் அளவு பெருகிக்கொண்டே சென்றது.

வழக்கமாக வினோபாவும் அவருடைய சீடர்களும் அதிகாலையில் மூன்று மணிக்கு எழுந்து காலை வழிபாட்டை முடித்துக்கொண்டு நடைப்பயணத்தைத் தொடங்குவார்கள். அறுபதைத் தொடும் வயதில் அவருக்கு உடல்நலம் சார்ந்த பல பிரச்சினைகள் இருந்தன. ஆனாலும், துளிகூட அதைப் பற்றிப் பொருட்படுத்தாமல் உற்சாகமாக நடந்தார் வினோபா. அவருடைய சீடர்களுடன் இருவரோ மூவரோ அயல்நாட்டைச் சேர்ந்தவர்களும் சேர்ந்துகொள்வார்கள். ஒவ்வொரு கிராமத்திலும் அவர்கள் அனைவருக்கும் நல்ல வரவேற்பு கிடைக்கும்.

காலை உணவுக்குப் பிறகு கிராமத்தில் சுற்றியலைந்து தாழ்த்தப்பட்டவர்களையும் மற்றவர்களையும் சந்தித்து உரையாடி ஊரில் உள்ள நிலவரத்தை முதலில் புரிந்துகொள்வார்கள். பிறகு தேவைகள் என்னென்ன என்பதைக் கேட்டு குறித்துக்கொள்வார்கள். மாலை வேளையில் பிரார்த்தனைப் பாடலோடு சந்திப்பு தொடங்கும். அந்தக் கிராமத்தைச் சேர்ந்த நூற்றுக்கணக்கான விவசாயிகளும் அக்கம்பக்கத்து ஊர்க்காரர்களும் நிலக்கிழார்களும் செல்வந்தர்களும் கூட்டத்துக்குத் திரண்டு வந்திருப்பார்கள். அவர்களை நோக்கி கீதையிலிருந்தும் பல்வேறு ஞானியரின் வாழ்க்கையிலிருந்தும் பல பகுதிகளை எடுத்துச் சொல்லி, மனிதநேயம், பகிர்ந்துண்ணும் பண்பாட்டின் மேன்மை,



இந்திரா காந்தியுடன்

மானுட உறவு ஆகியவற்றின் முக்கியத்துவத்தையும் எடுத்துரைப்பார் வினோபா.

நிலமற்ற விவசாய உழைப்பாளிகள் படும் துயரத்தை மனமுருகும் வண்ணம் எடுத்துரைப்பார். அவருடைய உணர்ச்சி ததும்பும் உரையைக் கேட்டு, அனைவருடைய உள்ளங்களிலும் கருணை ஊற்றெடுக்கும். நிகழ்ச்சியின் இறுதியில் நிலமற்ற உழைப்பாளிகளுக்கு நிலம் வழங்கும்படி நிலக்கிழார்களிடம் வேண்டுவார். நிலக்கிழார்கள் தாமாகவே முன்வந்து தமக்குச் சொந்தமான நிலங்களை ஏழைகளுக்கும் தாழ்த்தப்பட்டவர்களுக்கும் தானமாக வழங்குவதைப் பற்றி அறிவிப்பார்கள்.

இந்தியா முழுக்க ஆயிரக்கணக்கான மைல் தொலைவை, வினோபாவும் அவர் தொண்டர்களும் நடை பயணமாகவே சென்று, எண்ணற்ற கிராம மக்களைச் சந்தித்து உரையாடினார்கள். நாடெங்கும் பூதானத்தைப் பற்றிய பேச்சாகவே இருந்தது. 1951ஆம் ஆண்டில் தொடங்கிய அவருடைய நடைப்பயணம் 1957 வரை தொடர்ந்தது. இப்பயணங்களின் முடிவில், மொத்தத்தில் நாற்பதுமில்லியன் ஏக்கர் நிலம் தானமாகப் பெறப்பட்டு நிலமற்ற தாழ்த்தப்பட்டோருக்கும் எளியோருக்கும் வழங்கப்பட்டிருந்தது. வேறெந்த தேசத்திலும் நிகழாத சாதனையை வினோபா இந்தியாவில் நிகழ்த்தியிருந்தார்.

தனிப்பட்ட மனிதர்கள் தானமாகப் பெறும் நிலங்களில் சிலர் தொடர்ச்சியாகப் பயன்படுத்துவதில்லை. சிறிது காலம் பயிரிட்டு அறுவடை செய்தபிறகு, தரிசாகப் போட்டுவிடத் தொடங்கினர். சிலர் கிடைத்த விலைக்கு விற்றுவிட்டனர். சிலர் அடகுவைக்கமுற்பட்டனர். சிலர் தம்வசம் இருக்கும் நிலத்தை விவசாயம் செய்வதற்காக வேறொருவருக்கு கைமாற்றிக் கொடுத்தனர். இதனால் தானம் பெற்றதன் நோக்கம் அடிபட்டுப் போவதைப் பார்த்து மனவேதனைப்பட்டார் வினோபா. அதனால், நீண்ட யோசனைகளுக்குப் பிறகு அவர் புதியதொரு முடிவெடுத்தார்.

ஒரு கிராமத்தில் தானமாகப் பெறும் நிலங்களை தனிப்பட்டவர்களுக்குப் பிரித்தளிக்காமல் அக்கிராமத் தலைமையின் பொறுப்பில் விடுவதென்றும், ஒருவர் தம்மால் பயிர்செய்ய முடிந்த அளவுக்கு நிலத்தை தலைமையிடமிருந்துபெற்று பயிர் செய்துகொள்ளலாம் என்றும் முடிவெடுக்கப்பட்டது. ஒவ்வொருவரும் பொறுப்பெடுத்துச் செயலாற்றி, ஒவ்வொருவரும் பயன்பெறும் கூட்டுப்பண்ணை முறையை அறிமுகப்படுத்துவது அவர் விருப்பமாக இருந்தது. வினோபா இம்முறைக்கு 'கிராமதான்' என்று பெயர்சூட்டினார்.

பத்தாண்டு கால இடைவிடாத பயணங்கள் வழியாக ஏறத்தாழ ஒன்றரை லட்சம் கிராமங்களில் 'கிராமதான்' பெறப்பட்டு கிராமத் தலைமையின் மேற்பார்வையின் கீழ் அனைவரும் கூடி உழைக்கும் விதமாக மாற்றியமைக்கப்பட்டது. 1951 முதல் 1970 வரை சலிப்பின்றி இடைவிடாமல் தொடர்ந்த வினோபாவின் நடைப்பயணம் மகத்தானதொரு சாதனை.

'ஜெய் ஜகத்' என்பது வினோபா வழங்கிய மகத்தான சொல். அனைவரும் ஒன்றென வாழ்ந்தால் மட்டுமே உலகம் வாழும். அனைவரும் சமமென்னும் சொல்லைவிட அனைவரும் ஒன்றென்னும் சொல் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. அனைவருக்குள்ளும் வாழும் இறைவன் ஒருவனே. ஆதலால் அனைவரும் ஒன்றே.

வினோபா வலியுறுத்தும் ஒற்றுமை என்னும் சொல்லுக்குப் பின்னால் அனைவரையும் ஒன்றிணைக்கும் தத்துவப் பார்வை உள்ளது. சமுதாய அளவிலும் பொருளாதார அளவிலும் சமத்துவத்தை உருவாக்கலாம். ஆயினும், மனதளவில் ஏற்படும் சமத்துவத்தால் மட்டுமே ஒற்றுமை உருவாகும். அப்போதுதான் உலகம் தழுவிய மானுடமும் சாத்தியப்படும். அந்த அன்புப் பாதையில் அனைவரையும் அழைத்துச் செல்ல முனைந்தவர் வினோபா. ●

பாவண்ணன் <paavannan@hotmail.com>

## வருந்துகிறோம்





**மறைந்த எழுத்தாளர்கள்**
**டி. செல்வராஜ், நஞ்சுண்டன்**
**இருவருக்கும் அம்ருதா அஞ்சலி**
**செலுத்துகிறது**

# பாக்கியம் சங்கரின் நான்காம் சுவர்

ந. பெரியசாமி

சாலையில் எலியோ நாயோ செத்துக் கிடந்தால், முக்கை பொத்தி, முகம் சுளித்து கடந்திடுவோம். மனிதர்களாக இருப்பின் அய்யோ பாவம் என கசிந்துருகி கடந்திடுவோம். மறுநாள் அச்சாலை நேற்றைய சுவடை இல்லாமலாக்கி இயல்பை இறுத்தி இருக்கும். இவ்வுலகம் தங்குதடையின்றி முகச்சுளிப்பற்று இயல்பாக இருக்கச் செய்யும் மனிதர்கள் குறித்து என்றேனும் கவனத்தில் கொண்டிருக்கிறோமா? அவர்கள் குறித்த நம் அக்கறைதான் என்ன?

கடந்துசெல்லும் ஆம்புலன்ஸ் வாகனத்தை பார்த்ததும் உள்ளிருப்பவர்களுக்கு ஏதும் ஆகிடக் கூடாதென வேண்டுதல் வைப்பவர்களை கண்கூடாகப் பார்த்திருக்கிறோம். அப்படியானவர்கள் கூட இம்மக்களின் ஆரோக்கியத்திற்காக ஒரு நொடியாவது பிரார்த்தனை செய்திருப்பார்களா? உறுதியாக சொல்லலாம், இருக்காது. “நீ நீயாகவே இருக்காதே; உடனிருப்பவனையும் நேசி” என சூடு வைக்காமல். துப்பாக்கியால் சுடாமல் நம்முள் பெரும் காயத்தை ஏற்படுத்தி செல்கிறார் பாக்கியம் சங்கர், இந்த தன் ‘நான்காம் சுவர்’ தொகுப்பில்.

ஊரின் முகப்பில் நிற்கும் எல்லைச்சாமி போல் தொகுப்பின் எல்லைச்சாமியாக திருப்பால் இருக்கிறார். தொகுப்பில் வாழும் மற்றைய மனிதர்களை வாசிக்க, திருப்பாலின் நிழல் படிந்த மனிதர்களாகவே எல்லோரும் இருக்கிறார்கள். ஓரமாக ஒதுங்கிக் கிடக்கும் பிணவறையின் இதயமாக திருப்பால் இருந்திருக்கிறார். அவரை உயிர்ப்போடு வைத்துக்கொண்டிருந்தது இளையராஜா இசை. பிணவறையில் அவரே மன்னன். ஆனால், உடலை வளர்க்க உணர்வை இழக்கும் அரசனல்ல.

நிரந்தரம் என்று இவர்களுக்கு ஏதும் கிடையாது. பஸ் நிலையம் அருகில் கிடைக்கும் இடமே இவர்களின் வித்தைக்கான களம். அந்தரத்தில் கயிற்றைக் கட்டி காற்றோடு நடக்கும் பாபுஜீ மூலம் தொம்பரக் கூத்தாடிகளின் வாழ்வை காட்சிபடுத்துகிறார்.

‘விபரம் தெரியாதவனும் நல்ல போதையில் இருப்பவனும்தான் விஷ வாயுவுல மாட்டிப்பான் நைனா’ எனும் மாலகொண்டையாவின் குரல், இனி சாக்கடை சுத்தம் செய்பவர்களை கானும் பொதெல்லாம் நம் காதில் ஒலிக்கும். மாலகொண்டையாவின் இறப்பு குறித்த பத்தியை வாசிக்கையில் உறவுகளின் இறப்பு செய்திக்கான மனநிலையில் கணத்துக் கிடக்கச் செய்கிறார் பாக்கியம் சங்கர்.






பேட்டையில் வாழும் பசங்களுக்கு தனக்குத் தெரிந்த விளையாட்டுகளை கத்துக் கொடுக்கும் வாத்தியார் சாண்டோ ராஜ். பிரமச்சாரி. அவர் இறந்து போய்விட இடுகாட்டில் சடங்குகள் செய்கையில் மாசாணம், “வாத்தியாரு பிரம்மச்சாரி... கொள்ளி யாருப்பா போட்றது” என கேட்கையில், “நா வாத்தியாரோட புள்ள, நா போட்றேன்” என நூற்றுக்கும் மேற்பட்ட சிஷ்யர்கள் முண்டியடித்துக் கொண்டு வருகிறார்கள். வாழ்தல் என்பது வெறுமனே வாழ்தல் அல்ல, அர்த்தமிக்கதாக இருக்க வேண்டும். அது இப்படி ஒரு சிலருக்குத்தான் வாய்க்கிறது.

இதுபோன்ற இந்த தொகுப்பில் வாழும் மனிதர்கள் குறித்து பேசவும் எழுதவும் நிறைய இருக்கிறது. அவர்களின் வாழ்வில் இருக்கும் அழகியலை நுட்பத்தோடு வெளிப்படுத்த, சமகால படைப்பாளிகளின் படைப்பிலிருந்தும் ஒப்புமைபடுத்தி எழுதிச் சென்றிருக்கும் பாக்கியம் சங்கரின் மொழி நம்மை துளைத்து நமக்குள் குடிகொண்டு விடுகிறது. ●

ந.பெரியசாமி <na.periyasamy@gmail.com>

நான்காம் சுவர் - பாக்கியம் சங்கர்: விலை ரூ. 375;
வெளியீடு: யாவரும் பப்ளிஷர்ஸ், சென்னை;
தொலைபேசி: +91 90424 61472;
மின்னஞ்சல்: yaavarum1@gmail.com

# மௌனி

வண்ணநிலவன்

மௌனியின் இயற்பெயர் 'மணி' என்று சொல்லக் கேள்வி. ஒருவேளை அது அழைக்கப்பட்ட பெயராகவும் இருக்கலாம். 1907இல் பிறந்த மௌனி 78 ஆண்டுகள் வாழ்ந்திருக்கிறார். மொத்தமே 24 சிறுகதைகள்தான் எழுதியிருக்கிறார். 1939 வரை நடந்த 'மணிக்கொடி' என்ற பத்திரிகையில் எழுத ஆரம்பித்து 12 சிறுகதைகளை அதில் மௌனி எழுதியிருக்கிறார். மணிக்கொடி தவிர 'ஹனுமான்', 'சிவாஜி', 'சரஸ்வதி', 'தினமணி' மலர்கள், 'தேனீ' போன்ற பத்திரிகைகளிலும் தனது தனித்துவமான சிறுகதைகளை எழுதியிருக்கிறார். 1970களில் வெளிவந்த 'கசடதபற' என்ற இலக்கியப் பத்திரிகையில் 'தவறு' என்ற தனது கடைசிச் சிறுகதையை எழுதியிருக்கிறார்.

'மணிக்கொடி', அக்காலத்தில் மறுமலர்ச்சிப் பத்திரிகையாகக் கருதப்பட்டது. ஆனந்தவிகடனுக்கும் மணிக்கொடிக்கும் போட்டி நிலவியது. ஆனந்தவிகடனில் மணிக்கொடியைப்போல் இலக்கியத் தரம் மிக்க சிறுகதைகள் வெளியாகவில்லை. அதனால், 'இலக்கியப் பத்திரிகை' என்ற அந்தஸ்து, மணிக்கொடிக்கே கிடைத்தது. இதில் எழுதிய புதுமைப்பித்தன், கு.ப.ரா., ந. பிச்சமூர்த்தி, ந. சிதம்பர சுப்பிரமணியன், ஆர். சண்முகசுந்தரம், சிட்டி, சி.சு. செல்லப்பாவின் சிறுகதைகளுடன், மௌனியின் சிறுகதைகளும் வெளிவந்ததாலும், தொடர்ந்து மௌனி மணிக்கொடியில் எழுதியதாலும், மௌனியும் 'மணிக்கொடி எழுத்தாளர்' என்றே அழைக்கப்பட்டார். 'மௌனி' என்ற புனைபெயரைச் சூட்டியவர் அக்காலகட்டத்தில் 'மணிக்கொடி' ஆசிரியராக இருந்த பி.எஸ். ராமையா தான்.

மௌனியை, அவர் மணிக்கொடியில் எழுதி வந்த காலத்திலேயே, 'தமிழ்ச் சிறுகதையின் திருமூலர்' என்று கூறினார், புதுமைப்பித்தன். 'தமிழ் மரபுக்கும் போக்குக்கும் புதிதாகவும் சிறப்பாகவும் வழி வகுத்தவர் ஒருவரைச் சொல்லவேண்டும் என்றால், 'மௌனி' என்ற புனைபெயரில் எழுதி வருபவரைத்தான் குறிப்பிட வேண்டும். அவரைத் தமிழ்ச் சிறுகதையின் திருமூலர் என்று சொல்லவேண்டும். கற்பனையின் எல்லைக்கோட்டில் நின்று வார்த்தைக்குள் அடைபட மறுக்கும் கருத்துக்களையும் மடக்கிக் கொண்டுவரக் கூடியவர் அவர் ஒருவரே.' இது மௌனிக்குப் புதுமைப்பித்தன் அளித்த சான்றிதழ். 1946இல் மௌனியின் எழுத்தைப் பற்றி புதுமைப்பித்தன் வானொலியிலும் பேசியிருக்கிறார்.

'சொல்லவேண்டும், சொல்லவேண்டும்' என்பது மௌனியைத்திருமூலருடன் ஒப்பிட்டு புதுமைப்பித்தன் கூறிய பகுதியில் இரண்டு இடங்களில் இடம் பெறுகிறது. ஒரு இடத்தில் 'குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்' என்றும் புதுமைப்பித்தன் எழுதியிருக்கிறார். இந்தப் பாணி க.நா.சு.வினுடையது. நான் படித்த வரையில் அடிக்கடி க.நா.சு.தான், 'சொல்ல வேண்டும், குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்' என்றெல்லாம் தனது கட்டுரைகளில் எழுதுவார். (பிறகு, இதே பாணியை க.நா.சு.வின் சீடரான சா.கந்தசாமியும் தனது கட்டுரைகளில் அடிக்கடி 'சொல்ல வேண்டும்' என்று எழுதியிருக்கிறார்) அதனால், திருமூலரைப் பற்றி புதுமைப்பித்தன் கூறியதாகக் கூறும் பகுதி க.நா.சு. எழுதியதோ என்று சந்தேகப்பட வைக்கிறது.

எம்.வி.வி. என்ற எம்.வி.வெங்கட்ராம், ஒரு பேட்டியில், "மௌனியின் சிறுகதைகளில் வாக்கிய அமைப்புகளே ஒழுங்காக இருக்காது. பி.எஸ். ராமையாதான் அவற்றைத் திருத்துவார். முற்றுப் புள்ளியே மௌனி போடமாட்டார். கதைகளுக்குத் தலைப்பு வைத்தது எல்லாம் ராமையாதான்" என்றெல்லாம் கூறியிருக்கிறார். இது எந்த அளவுக்கு உண்மை என்று தெரியவில்லை. மணிக்கொடியில் மௌனி எழுதியதை வைத்து எம்.வி.வி. இப்படிச் சொல்கிறார். ஆனால், மௌனியின் சிறுகதைகள் 'ஹனுமான்', 'சிவாஜி', 'தினமணி மலர்', எம்.வி.வி.யே நடத்திய 'தேனீ' பத்திரிகைகளில் எல்லாம் வெளியாகியிருக்கிறது. பி.எஸ்.ராமையா மணிக்கொடியில் வெளியான மௌனியின் கதைகளைச் செப்பனிட்டு, தலைப்புகளும் வைத்தார் என்றால், 'கசடதபற' முதல் 'ஹனுமான்' வரை, 'மணிக்கொடி' அல்லாத பல பத்திரிகைகளின் ஆசிரியர்களும், பி.எஸ். ராமையா செய்ததுபோல் செய்தார்களா என்ற கேள்வி எழுகிறது. எனவே, எம்.வி.வி. கூறியது தவறு என்றே கொள்ளவேண்டும்.

க.நா.சு. ஒரு சந்தர்ப்பத்தில் மௌனியை காஃப்காவுடன் ஒப்பிட்டிருக்கிறார். இன்னொரு கட்டுரையில் க.நா.சு., "மௌனியைப் பற்றித் தமிழ் வாசகர்களை இடித்துக் கூறுகிற காரியத்தைப் புதுமைப்பித்தன் தொடங்கினார். அதற்குப் பிறகு சமயம் வாய்க்கும்போதெல்லாம் மௌனியின் பெயரைக் கூறி வந்திருக்கிறேன்' என்று கூறுகிறார். (புதுமைப்பித்தன்) "மௌனியைத் திருமூலர் என்று கூறியது தரத்தை பற்றியும் உருவத்தைப் பற்றியும், பிற சிறப்புகள் பற்றியும்தான்" என்றும் க.நா.சு. எழுதியிருக்கிறார்.

மௌனியைத் திருமூலருடன் புதுமைப்பித்தன் ஒப்பிடவும், க.நா.சு.வும் அவருக்குப் பின் பலரும் வியந்த மௌனியின் உரைநடை இதுதான்:

பத்து வருஷங்களுக்கு முன்பு இவன் பட்டணத்தில் உயர் படிப்புப் படித்துக்



கொண்டிருந்தபோது, இவன் பெற்றோர்கள் இவனுக்குக் கலியாணப் பிரயத்தனங்கள் செய்ததுண்டு. ஒவ்வொரு சமயமும் காரணம் காண முடியாத வகையிலே, எதேச்சை குறுக்கீட்டினால் என அவைகள் எல்லாம் தடைப்பட்டுவிட்டன'. (மனக்கோட்டை)

'ஒவ்வொருசமயமும்ஏதோவொருகாரணத்தினால் யதேச்சையாக அவை தடைப்பட்டு விட்டன' என்றுதான் பொதுவாக எழுதவேண்டும். ஆனால், மௌனி வேறுவிதமாக எழுதி தனது நடைக்கு ஒரு கவர்ச்சியைக் கொண்டு வருகிறார்.

'இருட்டுவதற்கு முன்பு மாலை வந்தது. அது ஒரு மயக்கத்தைத் தருகிறது. இன்று நடுப்பகல் வெயில் கடுமை. இனிய எண்ணங்கள் மறைந்தன. வருங்காலம் பற்றி எண்ணத் தோன்றுகிறது' என்பதை மௌனி எப்படி எழுதுகிறார்? இது மௌனியின் நடை: '

இருட்டு காணும் முன்பு மாலை வந்து கொண்டிருக்கிறது. மயக்கமும் கூட வருகிறது. இன்று நடுப்பகல் வெயில் கடுமை. வசீகர எண்ணங்கள் மறைய, வருங்கால நினைவுகள் தோன்ற இருக்கிறது.

என்று மௌனி சுற்றி வளைத்து, சற்றுக் கனமான வாக்கிய அமைப்புகளைக் கொண்டு எழுதுகிறார். இதுதான் புதுமைப்பித்தனை, க.நா.சு.வைக் கவர்ந்தது. 'வருங்கால நினைவுகள் தோன்ற இருக்கிறது' என்று எழுதி தனது உரைநடையில் ஒரு புதுமையைக் கொண்டு வருகிறார் மௌனி.

மௌனியின் சிறுகதைகளில் மெலிதான தத்துவ வாழ்வு குறித்த விசாரம் சில இடங்களில் வெளிப்படுகிறது என்பதைத் தவிர, அவரது புதுமையான நடையைத் தவிர வேறு எதுவும் இல்லை. முற்போக்கு இலக்கியத்திற்கு அவருடைய சிறுகதைகள் இடம் தராது. அதுபோல் இக்கால எழுத்தாளர்கள் (ஜெயமோகன் போன்றவர்கள்) கூறும் அறம், தரிசனம் போன்ற எதுவும் அவரது சிறுகதைகளில் அகப்படாது.

'மௌனி வித்தியாசமான உரைநடையில் எழுதியவர்' என்பதைத் தவிரக் குறிப்பிட்டுச் சொல்ல எதுவுமில்லை. இதுவே அவரது தனித்துவம். இதைப் பார்த்துத்தான் புதுமைப்பித்தனும் க.நா.சு.வும் மயங்கி, வியந்திருக்கிறார்கள்.

(அடுத்த இதழில் ந. பிச்சமூர்த்தி)

வண்ணநிலவன் <ramachandran.u49@gmail.com>

கவிதை

# கருணாகரன் கவிதைகள்



**ஓவியம்: நடேஷ்**

1

நாங்கள் மத்தியூவைச் சந்திக்கச் சென்றபோது
அவன் இறந்து கிடந்தான்.

என்ன செய்வது என்று தெரியாமல்
ஒரு கணம் தடுமாறி விட்டோம்

அப்போது
"கவலைப்பட வேண்டாம் நண்பர்களே.
இது என்னுடைய பதினான்காவது மரணம்.
இதுவும் ஒரு தற்கொலைதான்" என்றான் மத்தியூ.

அவனுடைய இறப்பை விட
இது தற்கொலை என்பதும் பதினான்காவது மரணம் என்பதும்
பயத்தையும் குழப்பத்தையும் உண்டாக்கியது.

"உங்களுக்குத் தெரியுமா,
ஏற்கனவே நான் ஐந்து தடவைகள்
இந்த மாதிரித் தற்கொலை செய்திருக்கிறேன்" என்று சிரித்தான்.

இதற்கு என்ன சொல்வதென்று தெரியாமல் நாங்கள்
தடுமாறிக் கொண்டிருப்பதற்கிடையில்...

"மற்ற ஒன்பதும் கொலைகள்.
ஆனால், இப்படித் திரும்பத் திரும்பக்
கொலையாவதுதான் சலிப்பூட்டுகிறது"
என்றான் மத்தியூ.

கொலைகளின் நடுவில்
கொலையாளியின் முன்னே
கொல்லப்பட்டவனின் அருகில்
என்ன செய்வதென்று தெரியாத தத்தளிப்பில்
நாங்கள் நின்று கொண்டிருந்தபோதுஞ்

"நண்பர்களே!
எல்லாக் கொலைகளுக்கும் சாட்சியங்களிருந்தன.
ஆனால், எந்த சாட்சியும்
சாட்சியமளிக்கவில்லை" என்றான்.

எங்களையும் அப்படிச் சொல்கிறானா
இதோ இந்தக் கணத்தில்
அவனுடைய உடலின் முன்னே
சாட்சியாக நிற்கிறோமே!

அவன் எங்களைப் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை.

"சாட்சியங்களில்லாத கொலைகளுக்கு நீதியுமில்லை,
கருணையுமில்லை.
கருணையிருந்தால் கொலைகளே நேராது"
எனத் தன்னிரு கைகளையும் நீட்டி, வரவேற்றான்.

என்ன சொல்வது அவனுக்கு என்று தெளிவதற்கிடையில்
"உங்களுக்கான தேநீரைத் தயாரித்து வைத்திருக்கிறேன்.
பருகிச் செல்லுங்கள்.
திரும்பிச் செல்லும்போது
தயவுசெய்து என்னுடைய நினைவை மட்டும்
இங்கேயே விட்டுவிட்டுச் செல்லுங்கள்
அதுவொரு தீண்டாப் பொருளாக இருக்கட்டும்" என்றான்.

அது கட்டளையா
அன்பினாலான கோரிக்கையா என்று தெரியவில்லை
ஆனாலந்தக் குரலில் கொண்டிருந்த குழைவில்
நேசத்தின் பருக்கைகள் மின்னின.
அந்தத் தேநீரில் குருதி வாசனை வீசியபோது
நாங்கள் தலைகளைத் தாழ்த்திக் கொண்டோம்
கண்களிலிருந்து பூக்கள் சிந்தின.

மத்தியூவை நாங்கள் பிறகொரு
நத்தார்ப் பண்டிகையில்தான் சந்திக்க வாய்த்தது.
அதுவுமொரு எதிர்பாராத சந்திப்புத்தான்.
அது பாலன் பிறந்த நேரம்

இது தன்னுடைய பத்தொன்பதாவது பிறப்பு என்று
கண்களைச் சிமிட்டினான்.

இரண்டு வருடம் கழித்து
ஒரு நாள்



“இனந்தெரியாத முறையில்
மர்மமாகக் கொல்லப்பட்ட சடலமொன்று
பாலத்துக்குக் கீழே கிடக்கிறது” என்று யாரோ சொல்லவும்
பதட்டமாய்ச் சென்று பார்த்தேன் -

மத்தியூ.

அது கொலையா
தற்கொலையா என்று தெரியவில்லை
எத்தனையாவது மரணமென்றும்.

அந்த உடலைப் படம்பிடித்துக் கொண்டிருந்தார்கள் யாரோ

அதற்கு ஏற்றவாறு
எந்தக் கோணத்தில் தன்னை வைத்திருப்பது எனத்
தெரிந்திருக்குமா அவனுக்கு என்று
ஏனோ ஒரு எண்ணம் வந்தது எனக்கு

“இது எதற்கென்றே தெரியாமல் நடந்த கொலை
யாரால் ஆனதென்றும் தெரியவில்லை
வழமையைப்போல இதற்கும் சாட்சியங்களில்லை
அதனால் என்ன?”
என்றான் மத்தியூ மிகச் சாதாரணமாக.

2

இரண்டு மாதத்துக்குப்பிறகு
தான் பூவாகி விட்டதாக
மத்தியூவிடமிருந்து
மின்னஞ்சல் வந்திருந்தது.

அதை நம்பும்படியாக
அந்த மின்னஞ்சலிலிருந்து
நேசம் மிக்கதொரு
பூவாசம் வீசியது
அது என்ன பூவாசமென்று
நீங்கள் கேட்கக்கூடும்

தேன்பூவாசம்.

மாறாதிருந்த அந்தப் பூவாசத்தின் மீது
ஒரு செம்பறவை வந்தமர்ந்தது ஒருநாள்

அன்று மத்தியூ
தன் கால்களிலொன்றை
கடவுளுக்குக் கொடுத்துவிட்டு வந்தான்

“எத்தனை காலம்தான்
ஒற்றைக் காலோடு உலகாயன்
தெத்தித்திரிவது?

மலையேறவும் மந்தை மேய்க்கவும்
வயலில் களையெடுக்கவும்
காதல் முற்றத்தில் பயிர் விளைக்கவும்
வலையெறியவும் உதவட்டும்" என்றான்.

"இனியுன் நிலை?"
என்று கேட்டோம்.

"உன்னிடமிருப்பதைப் பகிர்ந்தளி என்பது
தேவ வாக்கல்லவா" என்று சிரித்தான்.

"சித்தம் பலித்தால் சீர்பாலிக்கும்" என்றேன்.

அந்தச் செம்பறவை எழுந்து பறந்து சென்றபோது
அதன் சிறகுகளில் தேன்பூவின் வாசத்தோடு
மத்தியூவின் சிரிப்பொலி கேட்டது.

மத்தியூ... மத்தியூ...

3

"இரவு ரெயினில் வந்து கொண்டிருக்கிறேன்"
என்று தகவல் அனுப்பியிருக்கிறான் மத்தியூ

இனி
பனைகள் நிரம்பிய அந்தக் கடற்கரையில்
அண்டசாராசரமும் அணுவாகும்
அணுவும் பெரும் பொருளாகும்
மழைப்பாடல் அவனுடலாகும்
அவனே பரம்பொருளாவான்

நாமந்தப் பெரு மணற் திடலில் கூடுவோம்
பெருஞ்சோதியைக் கண்டின்புற்றுக் களித்திட.

மணல் மேட்டில்
சிலுவைக்காடெனப் பொலிந்திருக்கும்
'சுனாமி நினைவு'க்காட்டை ஊடறுத்து
வரலாறும் நிகழ்காலமும்
அங்குமிங்குமாய் மின்னலடித்துப் பாயும்.
அந்த மின்னதிர்வில்
பாறி வீழ்ந்தவர் பலர்
மீறி எழுந்தவர் சிலர்
ஆடிக்களித்தவரும் பாடிச்சலித்தவரும்
ஒரொருபோது வென்றும் தோற்றும்
தோற்றும் வென்றும் போனார்
என்பதையெல்லாம் காண்போம்.

"வீழ்ந்தவரும் எழுந்தவரும் ஒன்றேதான்
கனவும் கையறு நிலையும் ஒன்றேதான்
பொய்த்துப் போனால்
புதுயுகமுமில்லை வரலாற்றின் நினைவுமில்லை

மெய்யென்றால்
நீயுமில்லை நானுமில்லை
உள்ளது உள்ளபடியெனில் எல்லாமும் ஒன்றுதான்
எனக்கெது உனக்கெது... மிச்சம்?

மழைக்காலத்தில்
பனை
தன் முலையை எங்கே ஒளித்து வைக்கிறது...?"
என்று பாடுகின்றான் மத்தியூ

குழந்தைகளைப்போல அந்தப் பாடலைத் திரும்பப் பாடுகின்றன
அலைகள்

அந்த அலைகளை அள்ளி முத்தமிட்டோம்

"அதெல்லாம் என்னுடைய குழந்தைகளே...
ஆரிரோ ஆரிரோ.. ஆரீரோ..."
என்கிறான் மத்தியூ

கண்கள் கசிந்தன

மத்தியூவைக் கிறங்கடித்திட
பனந்திரவியம் மட்டும் இந்த நாட்களிலில்லை
என்ற சோகம் என்னை வாட்டியது அக்கணம்.

"வெயிலின் பேரின்ப ஊற்றைப் பருகித் திரவியம்
தருகின்றன
பனையெல்லாம்..."

மத்தியூவின் கலகத்தில்
இரவு பகலாகும்
பகல் இரவாகும்
பொழுதழிந்து புதுநாளுதயமாகும்.

இந்த ரசவித்தைகளையெல்லாம் எங்கே படித்தான் மத்தியூ
தெரியவில்லை யாருக்கும்.

காலையில் தொடர் வண்டியிலிருந்து
மத்தியூவை அழைத்து வரச் சென்றபோது
பிளாட் பாரத்தில் ரத்தம் வழியச்
சிரித்தபடியே கிடந்தான் மத்தியூ
உயிரசைவில்லை.

அவனைச் சுற்றி வளைத்திருக்கும்
மஞ்சள் றிபன் வளையத்துள் கிடந்து கொண்டே



பொலிஸ் அதிகாரியைப் பார்த்து கண்ணடித்தான் மத்தியூ.

ஓ.. மத்தியூ
எங்கள் ரசமே...
எங்கள் பேரின்பத் திரவியமே!

4
விடைபெற்றுச் சென்று மூன்று மாதங்களின் பின்பு
எதிர்பாராமற் கிடைத்தது மத்தியூவின் டயறி
பழைய பொருட்களைக் கிளறிக் கொண்டிருந்தபோது
அதைக் கண்டெடுத்தான் M.O.B.

டயறியைத் தூக்கியபோதே
அதில் முத்தத்தின் வாசனை மிளிர்ந்தது
கலவியின் முனகல்களும்
பிரிவுத் துயரும் கலந்தும் பிரிந்தும் கேட்டன.
அலைச்சல்களின் தத்தளிப்பு தீயாய்த் தகிக்க
ஆயிரம் ரகசியக் குரல்கள் ஒலித்தன.
கருகிய கனவுகளின் மணம் எழுந்து படர்ந்தது.
குமுறும் அலைகள் பொங்கின.
கண்ணீரின் பிசுபிசுப்பு கைகளில் ஒட்ட
பதற்றத்தோடு எங்களைப் பார்த்தான் M.O.B

எத்தனை நெருக்கமான உறவெனினும்
இன்னொருத்தரின் அந்தரங்கமல்லவா!
அது ஆயிரம் மின்னலுக்கு சமம்
ஆயிரம் மின்னல்களையும் ஏந்தி
மூத்த மலையொன்றின் பாரமாய்க் கனத்தது அது
குதித்துச் சுழித்தோடும் ஆறு
சமுத்திரத்தின் ஆழ்பரப்பில் விரிய
நூறு நூறு சூரியன்களின் தகப்பு அதில் கொதித்துச் சுடர
டயறியைத் திறக்கவும் முடியாமல்
மூடியவாறே வைத்திருக்கவும் முடியாமல்
பூதத்தைக் கையில் வைத்திருப்பதைப்போலத் தத்தளித்தான் M.O.B

ஏதும் செய்ய முடியாமல்
மெல்ல அதை அங்கேயே வைத்துவிட்டுத்
திரும்பிய M.O.B.யின் மீது
விரிந்தது பறவைகளோடொரு மரம்
பூக்களும் பழங்களும் அதிலே நிறைந்திருக்க
அதன்மேலே நெருப்பெரிந்தது
கீழே வேரடியில் வெள்ளம் ஏறிக் கொண்டிருந்தது

5
தனக்குக் கிடைத்த தீர்ப்பை எண்ணியபோது
'க்ளுக்'கெனச் சிரிப்பு வந்தது மத்தியூவுக்கு.
ஆயிரம் வழக்குகளுக்குத் தீர்ப்புச் சொல்லியிருக்கிறான்
மத்தியூ
சொன்னதென்ன,
தீர்ப்பையே வழங்கியிருக்கிறான்
எதுவும் பிசகியதில்லை

குறி தவறாத குண்டும் தன்னுடைய தீர்ப்பும் ஒன்றென்று
மத்தியூவிற்குத் தெரியும்.
சொன்னால் சொன்னதுதான்
சட்டம், போட்டால் போட்டதுதான்
மேல் வழக்குக்குக்கோ மறுபேச்சுக்கோ இடமேயில்லை.

'போடுவது' அறமென்ற பிறகு ஏதொன்றும் புதியதல்ல
அதுவொரு கலை
சட்டத்தில் அதுவொரு 'புதிய ஏற்பாடு'
புதிய ஏற்பாட்டில் எவையெல்லாமோ நிகழ்ந்தேறின
எல்லாம் அறத்தின்படியே நிகழ்ந்து முடிந்தன



கிருஸ்ணபரமாத்மா சொன்னதென்ன
“உன்னைக் கொல்லவரும் பசுவையும் கொல்”
அறத்தின் விதியில்
பாரதப்போரே நடந்து முடியவில்லையா!

.

அப்போதெல்லாம்
கடவுள் கூடத் தலையை வெளியே நீட்டுவதற்கே தயங்கினார்
மத்தியூவின் நீதி ஒளிகூடியது
கண்களை மட்டுமல்ல
அறிவையே கூசச்செய்யுமளவுக்கு ஒளிகொண்டது
அதனால் தம் கண்களையும் புத்தியையும்
காத்திடவேண்டுமெனக்
கடவுள் தலையை மறைத்துக் கொண்டார்.
கடவுளில்லாத சாம்ராஜ்ஜியத்தில்
மத்தியூவின் கொடி பறந்தது
நீதி தளைத்து
அறம் பிழைத்து
புதிய விதி முளைத்து
வரலாறே புதிய முகம் கொண்டெழுந்தது சடைத்து.

ஒரு நாள்
ஒரு பகற்கனவைப்போல
எல்லாமே பிழைக்கச் சதி செய்தார் கடவுள்

காத்திருந்து கடவுள் செய்த சதியில்
மத்தியூவின் கொடி அறுந்து விழப் புயலடித்தது
வெள்ளம் பெருகியபோதும்
நெருப்பாகிச் சுட்டது நிலம்

“ரத்த வெள்ளம் அப்படித்தான் சுடும்
கையைக் காலைக் கண்ணைத் தலையை
வாழ்வையெல்லாம் சுடும்” என்றார் ரகசியமாகக் கடவுள்

“கொடியில்லாதவரெல்லாம் விதியற்றவர்
விதியற்றவரெல்லாம் வழியற்றவர்
வழியற்றவரெல்லாம் சிறைப்பட்டவர்”
என்று சொல்லித் தீர்ப்பளித்தார் நீதிபதி.

ஒருநாள் சிறைச்சோற்றில் கல்லெத்த
‘கடவுள் ஒரு பொல்லாத சதிகாரன்
காத்திருந்து கழுத்தறுக்கும் பேர்வழி’
என்றான் மத்தியூ.

“வரலாற்றுக் குழந்தைக்கு
எல்லாமே ஒரு விளையாட்டுத்தான் இல்லையா”
என்று மத்தியூ எழுதிய குறிப்பைக் காட்டுகிறான் M.O.B

**கருணாகரன்**
**<poompoom2007@gmail.com>**